# SPIRITUAL SONGS

IN TAMIL WITH MUSIC.

# இனிய ஞான கீதங்கள்.

தமிழ் நாட்டுக் கிறிஸ்தவர்கள் பாடுவதற்கும் வாத்தியங்களில் வாசிப்பதற்கும் உபயோகமாக

இராகங்களோடு

பிரசுரஞ் செய்யப்பட்டன.

3. *Stereotype Edition, Enlarged.*

TRANQUEBAR.

PRINTED AT THE CHURCH OF SWEDEN MISSION PRESS,

1921.

# SPIRITUAL SONGS

IN TAMIL WITH MUSIC.

# இனிய ஞான கீதங்கள்.

தமிழ் நாட்டுக் கிறிஸ்தவர்கள் பாடுவதற்கும் வாத்தியங்களில் வாசிப்பதற்கும் உபயோகமாக

இராகங்களோடு

பிரசுரஞ் செய்யப்பட்டன.

3. *Stereotype Edition, Enlarged.*

TRANQUEBAR,

PRINTED AT THE CHURCH OF SWEDEN MISSION PRESS,

1921.

# Preface.

The first small Collection of Tamil Spiritual Songs, translated from the German, was made and published in 1867, by the late Rev. H. Schanz, with popular German tunes in two voices. — A second Collection without tunes was published in the year 1888, containing a few songs of the former collection, but mostly newly translated ones. The Collection however was useful only to a limited number of Tamil Christians, who had access to German tune - books.

In 1895 we published a new Stereotype edition with *Music*, in which the Songs of the former edition were carefully revised and several new translations added. And in order to make the collection more comprehensive also some hymns of Fabricius were inserted. The present 2. Stereotype edition has been enlarged by some more new translation (No. 59—69). It is hoped that these *Spiritual Songs* will find many friends amongst the Tamil Christians, as their tunes are livelier than most of the Choral-Tune of the Fabricius' Hymn - Book.

The names of the authors, as far as they are known, and those of the translators have been given below every song, the former on the right and the latter on the left side.

May the Lord grant that this little book be conducive to the glory of His Holy Name and to the edification of His childern in this heathen land.

*H. Beisenherz.*

The chief feature of this third Edition of the "Tamil Spiritual Songs" is the addition of eleven songs and hymns, of which Nos. 72—80 have found a place in the revised ninth edition of the Tamil Lutheran Hymnbook (1921). Most of the new additions have been chosen from the Tamil Christian Hymnbook, used in other Protestant Churches. As the melodies are not available in the organist's tune-book, they appear here as a supplement. An arrangement, which for several reasons could not be made in this edition, is for the convenience of the organist, recommended for the next issue; viz, that the remaining hymnbook melodies which now are contained in a special supplement, published by Rev. R. Handmann, be inserted in this book. Thus only two tune-books will be left in use for Sunday services.



Moreover, in a new Edition all the supplement songs should be brought under their respective rubrics, whereby the present numbers will be altered. The retaining of several Fabricius Hymns, the tunes of which are already in the hands of the organist, is justified and commended, because this book is used also outside our Church, where the ordinary tune-book is not available.

The lowering of the key in twelve melodies of the previous edition will, it is hoped, be welcomed especially by those, who are engaged in teaching singing to Indian children. The editor is greatly indebted to the Rev. H. Beisenherz for his assistance. His name appears, as translator, under thirty songs and he is also responsible for a slight revision of the text generally.

May the book continue to be helpful to the Christians of the Tamil country in fulfilling the Apostle's admonition (Ephes. 5: 19) "Speaking to yourselves in psalms and hymns and spiritual songs, singing and making melody in your heart to the Lord."

June 1921. *D. Bexell.*






## CONTENTS.



## பொருளட்டவணை.





# 1. Hosianna.



தா வீதின் சுதனுக்கு ஓ சி யன் ஞ, ஓசியன் ஞ; கர்த்த ரின் நாமத்தி லே வ ரு கிற வருக்கிஸ்தோத் தி ரம்.



உன் ன தங் க ளில் ஓ சி யன் ஞ, ஓசி யன் ஞ, ஓ சி யன் ஞ;



ஓ சி ய ன் ஞ, ஓ சி யன் ஞ; கர்த்த ரின் நாமத் திலே வருகிறவருக்கிஸ்தோத் தி ரம்.
உன்ன தங்க ளில் ஓ சி யன் ஞ, ஓ சி ய ன் ஞ, ஓ சி யன் ஞ;



A. Ouchterlony. Abbé Vogler.

## 2. சகரி. ௯, ௯. (Tochter Zion freue dich).

க ளி கூரு, சீ யோனே, ஓ ம கிழ், எ ரு ச லேம்! ச மா தா ன க ர் த் த ராம்

உன் ரா சா வ ரு கி றார். க ளி கூரு. சீ யோனே, ஓ மகிழ், எ ரு சலேம்!

2. ஓசியன்னா, தாவீதின்
மைந்தனே, நீர் வாழ்கவே!
உம்முடைய நித்திய
ராச்சியத்தை ஸ்தாபியும்.
ஓசியன்னா, தாவீதின்
மைந்தனே, நீர் வாழ்கவே!

3. ஓசியன்னா, ராசாவே,
வாழ்க, தேவ மைந்தனே!
சாந்தமுள்ள உமது
செங்கோல் என்றும் ஆளவும்.
ஓசியன்னா, ராசாவே,
வாழ்க, தேவ மைந்தனே!

H Bz. J. J. Escherburg

## 3. சங்கீ. உச, எ-ய. (Macht hoch die Thür).

1. வாசல் களை உ யர்த் துங்கள், ம கா கர்த்தாவைவாழ்த்துங்கள்! ராசா தி ரா சா வ ருவார் பெ ரி ய தே வ மைந்த னர். உலகத்தைச் சிருஷ்டி த்து ரட்சித்த தே வ ரீ ரு க் கு துதி, த யா ப ரா, ஆலோ ச னை கர்த்தா!

2.

அவர் மா சாந் தமானவர்,
சகாயர் நீதியுற்றவர்.
ராசாவின் முடி சுத்தமே,
அவர் செங்கோல் இரக்கமே.
இக்கட்டை நீக்கினர் அன்பாய்,
புகழ்ந்து பாடுங்கள் ஒன்றாய்.
துதி, மா தேவனே,
பலத்த மீட்பரே!

3.

இக்கர்த்தர் உட்பிரவேசிக்கும்
போதெந்த ஊரும் தேசமும்
களிக்கும்; எங்கள் இதயம்
அடைவதும் மெய்ப்பாக்கியம்.
அவர் சந்தோஷப் பொழுதே,
மகிழ்ச்சியை அளிப்பாரே,
ஆ தேற்றும் உமக்கே
புகழ்ச்சி, கர்த்தரே!

4.

வாசல்களை உயர்த்துங்கள்,
நெஞ்சை அலங்கரியுங்கள்!
பத்தியின் குருத்தோலையும்
மகிழ்ச்சியின் கிளைகளும்
தெளியுங்கள்! ராசா வாறார்,
உங்களையும் இரட்சிப்பார்.
கர்த்தாவுக்கென்றைக்கும்
புகழ்ச்சி துதியும்!

5.

என்னண்டை, இயேசு, வாருமேன்!
என் வாசலைத் திறக்கிறேன்.
அருள் புரியும் தேவரீர்
என் நெஞ்சில் தங்கக் கடவீர்.
மோட்சத்தின் வழி காண்பிக்கும்
நல் ஆவியைத் தந்தருளும்.
என்றைக்கும் உமக்கே
புகழ்ச்சி, கர்த்தரே!

A. Gehring.

Georg Weissel † 1635.

## 4. ஓ மா சுத்த (O du fröhliche). Christmas.







2. ஓ மா சுத்த — கதியுற்ற
கிறிஸ்து சென்மித்த நாள் இதே.
கிறிஸ்துவே மீட்பர்
சாபத்தைத் தீர்ப்பர்
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

3. ஓ மா சுத்த — கதியுற்ற
கிறிஸ்து சென்மித்த நாள் இதே.
வானவர் பாட
மேய்ப்பர் கொண்டாட
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

H. Schanz.

## 5. Easter.

1. ஓ மா சுத்த — கதியுற்ற
கிறிஸ்தெழுந்த நன்னாள் இதே.
மாந்தர் கட்டுண்டோர்,
கிறிஸ்தோ எழுந்தோர்,
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

2. ஓ மா சுத்த — கதியுற்ற
கிறிஸ்தெழுந்த நன்னாள் இதே.
சாவை ஜெயித்தார்
சீவன் அளித்தார்
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

3. ஓ மா சுத்த — கதியுற்ற
கிறிஸ்தெழுந்த நன்னாள் இதே.
சீராய்ப் பிழைக்கும்
பெலன் கிடைக்கும்
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

## 6. Pentecost.

1. ஓ மா சுத்த — கதியுற்ற
பெந்தேகொஸ்தேயின் நாள் இதே.
கிறிஸ்து தாம் ஆண்டோர்
ஆவியைத் தந்தோர்
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

2. ஓ மா சுத்த — கதியுற்ற
பெந்தேகொஸ்தேயின் நாள் இதே.
நமக்கு ஆவி
நல் வழி காட்டி
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

3. ஓ மா சுத்த — கதியுற்ற
பெந்தேகொஸ்தேயின் நாள் இதே
ஆவியே, வாரும்,
ஆறுதல் தாரும்,
மகிழ், மகிழ், மெய்ச்சபையே.

J. D. Falk, † 1826.

## 7. ஏசா. ௰௧, ௧. (Es ist ein Reis).

1. { ஈசாயின் வேரினின்று, பிதாக்கள் பூர் வ மே
 உரைத்தபடி இன்று இராவி ருட் டி லே } ஓர் துளிர் நமக் கு இதோமுளைத்தெழும்பி நன்றாகப் பூக் கு து.

2. மிகுந்த மேன்மையுள்ள
இத்துளிரானது
மரியாளின் கற்புள்ள
கர்ப்பத்தில் தங்கிற்று.
பிதா அநாதி நாள்
குறித்த மேசியாவை
தேவாவியால் பெற்றாள்.

3. இவ்வாச்சரியமான
துளிரின் ஒளிவு
உலகிலே உண்டான
இருளை நீக்குது.
மனிதனாய் இப்போ
பிறந்த தேவ பிள்ளை
இரட்சகர் அல்லோ.

4. பிதா சுதன் தேவாவி
மா சுவாமிக்கென்றைக்கும்
ரட்சிக்கப்பட்ட பாவி
துதி செலுத்தவும்.
இந்நாள் பிறந்தவர்
பிதாவின் கோபம் ஆற்றி,
ராப் பகலாக்கினர்.

5. நான் இந்த மண்ணை விட்டு
பிரிந்து போகச்சே,
சகாயராய் நேரிட்டு
தற்காரும், இயேசுவே!
மோட்சானந்தத்திலே
உம்மைக் கொண்டாடி பாட
துணை நீர், கர்த்தரே.

A. Gehring.

## 8. இரட்சகரின் முன்னணை. லூக். உ, ௰௫. (Ihr Kinderlein kommet).




2. விளக்கு நன்றாகப் பிரகாசிக்கச்சே,
இப்பாலகன் வெள்ளை துணிகளிலே
சுற்றுண்டு கிடக்கிறார், தூதரிலும்
சிறந்த இப்பிள்ளையைப் பணியவும்.

3. வைக்கோல் மேல் கிடக்கிற பிள்ளையண்டை
மரியாள் யோசேப்பும் களிக்க, அதை
ஊர் மேய்ப்பர் வணங்க, ஆகாசத்திலே
தூதாக்களின் திரள் துதிக்கிறதே.

4. அனைவரும் கைகளைக் கட்டிக்கொண்டே
தாழ்வாய் முழங்கால் படியிட்டிருந்தே
இப்பிள்ளையைத் தொழுங்கள் மேய்ப்பரைப்போல்,
தூதாக்களின் கூட்டத்தில் துதியுங்கள்.

5. துதிக்கிறோம் நேசிக்கப்பட்டவரே,
நீர் எங்கள் எல்லாரையும் ரட்சிக்கவே
இம்முன்னணையில் மெத்த ஏழை ஆனீர்,
நீர் மரத்தில் மாளவும் மனங்கொண்டீர்.

6. பிள்ளைகளில் அருமையானவரே,
ஈடாக எதைத் தருவோம் உமக்கே?
இவ்வுலக பொக்கிஷத்தை விரும்பீர்
நொறுங்கிய நெஞ்சைச் சிநேகிக்கிறீர்.

7. இதோ, இதயங்களை நல் மனதாய்
கொடுப்போம், அவைகளைக் கிருபையாய்
நீர் ஏற்றுக்கொண்டுமெது ஐக்கத்திலே
நற்சுத்தமாய்க் காரும், இரட்சகரே.



Christoph von Schmid, † 1854.

## 9. லூக். ௨, ௰௫. (Adeste fideles).

1. கிறிஸ் தோரே, எல்லா ரும் களி கூர்ந்து பா டி, ஓ பெத்லகேம் ஊ ருக் கு வா ருங்கள். தூ தரின் ராசா
மீட்பராய்ப் பி றந்தார். ந மஸ் க ரிப்போமா க, ந மஸ்கரிப்போமா க, ந மஸ்கரிப்போமா க கர் த் தா வை.

2.

மகத்துவ ராசா,
சேனையின் கர்த்தாவே,
அநாதி பிறந்த மா தேவனே!
முன்னணை தானே
உமக்கேற்கும் தொட்டில்.
நமஸ். மு.

3.

விண் மண்ணிலும் கர்த்தர்
கனம் பெற்றோர் என்று
தூதாக்களே, பாக்கியவான்களே,
ஏகமாய்ப் பாடி
போற்றித் துதியுங்கள்.
நமஸ். மு.

4.

அநாதி பிதாவின்
வார்த்தையான கிறிஸ்தே,
நீர் மாமிசமாகி இந்நாளிலே
ஜெனித்தீர் என்று
உம்மை ஸ்தோத்திரிப்போம்.
நமஸ். மு.

## 10. In dulci jubilo.

1. அறுப்பிருக்கும் போல் மகிழ்ந்து பாடுங்கள்; நம்மை ஆற்றும் நன்மை இம்முன்னணையிலே மா சூரியன் அத்தன்மை விளங்கும் பிள்ளையே ஆதி யந்தமே ஆதி யந்தமே.

2. தெய்வீக பிள்ளையே,
அன்புள்ள இயேசுவே,
உம்மால் நான் களிக்க
என் நெஞ்சைத் தேற்றுமேன்;
நீர் என்னை ஆதரிக்க
நான் உம்மை அண்டினேன்.
என்னைச் சேருமேன். ::

3. பிதாவின் தயவும்
குமாரன் பட்சமும்
பாவத்தைக் கழிக்கும்.
நாம் கெட்டோர். திக்கில்லார்.
ஆனாலும் எக்கதிக்கும்
வழியைச் ஸ்வாமியார்
உண்டுபண்ணினார். ::

4. மெய்யாய் மகிழவே
வாழ்வேது? மோட்சமே.
அங்கே வானோர் பாடும்
சங்கீதம் இன்பமே,
ராசாவின் ஊரில் ஆடும்
மணிகள் ஓசையே,
வா, வா, மோட்சமே. ::

Fabricius (Hymn 32.)

Petrus Dresdensis † 1440.

## 11. வாதையுற்ற மீட்பரே (Hohes, heilges Marterbild).







2. ஞாயத்தீர்ப்பில் என் எல்லா
புண்ணியமும் விருதா,
தளரா முயற்சியால்,
மனஸ்தாபக் கண்ணீரால்
குற்றம் நீங்காதென்றைக்கும்;
கிருபைதான் ரட்சிக்கும்.

3. உள்ளவண்ணம் அண்டினேன்,
அன்பாய் என்னை நோக்குமேன்.
திக்கற்றோன் நான், ரட்சியும்;
நான் அசுத்தன், கழுவும்.
மூடும் என் நிர்வாணத்தை;
ஏழைக்கீயும் செல்வத்தை.

4. வாதையுற்ற மீட்பரே,
என் அடைக்கலம் நீரே.
என் இக்கட்டனைத்திலும்,
சாகுந் தருணத்திலும்
என் அடைக்கலம் நீரே,
வாதையுற்ற மீட்பரே.

## 12. இயேசுவின் ஐந்து காயம் (Jesu Wunden).

இயேசு பட்ட மா பலத்த ஐந்து காயம் வாழ்த்துவேன். மீட்பளிக்கும் உயிர்ப்பிக்கும் அதையே வணங்குவேன்.

2. பாதம் வாழ்த்தி,
என்னைத் தாழ்த்தி,
பாவத்தை அரோசிப்பேன்.
எனக்காக
நீர் அன்பாக
பட்ட வாதைக் கழுவேன்.

3. மாளுகையில்
மீட்பர் கையில்
ஆவி ஒப்புவிக்கிறேன்.
நான் குத்துண்ட
.திறவுண்ட
பக்கத்தில் ஒதுங்குவேன்.

H. Bz.

## 13. யோவா. ௰௬, ௨௫. (Stabat Mater).

1. துக்க முள்ள மாதா நின்று சிலுவையின் கீழ் குனிந்து மைந்தனுக்காய் அழுதாள்.

2. ஆ, மகா அகோரமான
இந்தத் துயரத்தைக் காண
யாராலும் முடியுமோ?

3. இந்த ஆபத்தில் கிடந்த
ரட்சகரின் தாயைக் கண்ட
கண் எல்லாம் நனையாதோ?

4. என் இவ்வாதை? எந்தத் தீங்கும்
இயேசு சாவினாலே நீங்கும்
என்றறி, என் மனமே.

5. மானிடர் பொல்லாப்புக்காக
அவர் வாதைப்பட்டுச் சாக
சிலுவையில் தொங்கினார்.

6. தீர்க்கர் வாக்கு நிறைவேறும்
நாளிலே மெய்ச்சபை சேரும்
சிலுவையண்டையிலே.

A. Gehring.

## 14. க கொரி. ௨, ௨. (Wollt ihr wissen, was mein Preis).

ஆரை நான் புகழுவேன்? ஆரை நான் அறிகிறேன்? என் சதியும் பங்கும் ஆர்? நான் பாராட்டும் மேன்மைஆர்? தேவ
ஆட்டுக் குட்டி தான்.

2. ஆர் நான் நிற்கும் கன்மலை?
ஆர் என் திட நம்பிக்கை?
குற்றத்தைச் சுமந்தோர் ஆர்?
தேவ நேசம் தந்ததார்?
தேவ ஆட்டுக்குட்டி தான்.

3. என் பிராண பெலன் ஆர்?
ஆத்துமத்தின் சாரம் ஆர்?
ஆரால் பாவி நீதிமான்?
ஆரால் தேவ பிள்ளை நான்?
தேவ ஆட்டுக்குட்டியால்.

4. கஸ்தியில் சகாயர் ஆர்?
சாவின் சாவு எனக்கார்?
என்னைத் தூதர் கூட்டத்தில்
சேர்ப்பதார் நான் சாகையில்?
தேவ ஆட்டுக்குட்டி தான்.

5. இயேசுதான் என் ஞானமே,
அவர் என் சங்கீதமே.
நீங்களும் புகழுங்கள்,
அவரைப் பின்செல்லுங்கள்,
தேவ ஆட்டிகுட்டியை.

H. Schanz.

J. C. Schwedler † 1730.

## 15. நல்ல செயம், போர் செய்தின்றே (Triumph! Triumph! es kommt).

1. நல் ல செயம், போர்செய் தின் றே கெலிப்பாய்ரா சா வா ரு ரே; அ வரைச்சேர்ந்தோர்யா வ ரும் இந்தச்செயத் தைப் பா ட வும். நல் ல செ யம், நல்ல செ யம், மு டி வில் லா பூ ரிப்பு மாம், அல் லேலூ யா.

2. மீட்பர் அடைந்த வெற்றிக்கு
எச்சிஷ்டியும் களிக்குது;
சீர்கெட்ட பூமிக்குள்ளதாம்
சாபம் அத்தால் நிவிர்த்தியாம்.
நல்ல செயம் மு.

3. கர்த்தர் மரிக்கும் நாளிலே
இருண்ட சூரியன் இன்றே
அவர் உயிர்த்த வெற்றிக்கு
ப்ரகாசமாய் விளங்குது.
நல்ல செயம் மு.

Fabricius (Hymn 72.)

4. மா சாந்த ஆட்டுக்குட்டியாய்
இருந்தோர் வல்ல சிங்கமாய்
வாறார், பகைஞரினுட
பத்திரக் காவல் விருதா.
நல்ல செயம் மு.

5. பாவ விஷத்தின் தோஷமும்
அத்தால் இருந்த தீமையும்
ரட்சகராலே நீங்கிற்று,
மகிமை தேடப்பட்டது.
நல்ல செயம்மு.

6. உத்தரவாதமாயிற்று,
சபிக்கப்பட்ட ஆவிக்கு
நம்மில் பயமில்லாதேபோம்,
சாவுக்கினி பயந்திரோம்.
நல்ல செயம் மு.

7. மேட்டிமையான பேலியாள்
தள்ளுண்டுபோய் விழுந்ததால்
அதின் அரண்கள் யாவுக்கும்
நிர்மூலமாகுதல் வரும்.
நல்ல செயம் மு.

8. சீஷரின் ஆத்துமங்களை
நீர் தேற்றி சமாதானத்தை
தந்ததுபோலே, இயேசுவே,
நீர் எங்களுக்கும் தாரீரே.
நல்ல செயம் மு.

9. நாங்கள் உடந்தையாய் உம்மால்
செயித்து, மோட்ச வாசலால்
உட்பிரவேசித்தென்றைக்கும்
உம்முட அன்பைப் பாடவும்.
நல்ல செயம் மு.

H. Ammersbach † 1691.

## 16. மா துக்கத்தின் பிற்பாடு (Auf, auf, mein Herz mit Freuden).

1. { மா துக்கத்தின் பிற் பா டு இன் றே வி ளங் கி ய
வெளிச்சத்தைக் கொண்டா டு, என் நெஞ்சே, நீ ம கா } ம கிழ்ச்சி யா யி ரு. பார், மரண

பி ற கு கு ழி யில் ரட் ச கர் ப டு த்தி ருந் த வர்.

2.
அப்போதகந்தையாக
பேய்க்கூட்டந்துள்ளிற்று,
இப்போதோ திகிலாக
மூறிந் ததிருது.
எழுந்த ரட்சகர்
செயம் அடைந்தவர்,
கொடியை ஏற்றினார்;
எதிர்ப்பவர்கள் ஆர்.

3.
மண்மீதில் அவர் நின்று
தெய்வீக மைந்தனாய்
விளங்குவதால் இன்று
பிசாசு பயமாய்
மூறிந்து போகுது.
தன் கோட்டைகளுக்கு
இடிப்பும் அழிவும்
வருமென்றுணரும்.

4.
இதே என் கண்ணுக்கான
சந்தோஷ வேடிக்கை,
என் மனதில் உண்டான
சலிப்பின் பாரத்தை
என் இயேசு நீக்கினார்,
கதி அளிக்கிறார்;
நான் அதைப்பற்றினேன்,
இனிப் பயப்படேன்.

5.
உறுப்பு சிரசோடே
எல்லா இடத்திலும் [வோடே
போமாப்போல், கிறிஸ்து
இக்கட்டைச் சாவையும்
பாதாளத்தையுமே
பிரிதலன்றியே
நல்நம்பிக்கையுடன்
நான் தாண்டிப்போறவன்.

6.
உயர்ந்த மகிமைக்கு
போறார் பங்காளன் நான்,
ஆர் என்னை என் தலைக்கு
விலக்கிப்போடுவான்;
பகைஞர் மிகவும்
வற்மித்துப் போரிட்டும்,
அவத்த உயுத்தம், .
அவர் என் கேடகம்.

7.
நான் இயேசுகிறிஸ்துவோ
பரத்தின் வாசலில் [டே
உட்போறேன், அவரோடே
சகித்தோனே இதில்
பிரவேசம் பண்ணுவான்.
இவ்வார்த்தை அதில் தான்
பொன்னுமொழியைப்போ
பதிந்த தெய்வ சொல். [ல்

Fabricius (Hymn 71.)

P. Gerhardt † 1676.

## 17. ஆ, வெற்றிசிறந்த ஆண்டவரே (O heiliger Gott).

1. ஆ, வெற்றி சி றந் த ஆண்ட வ ரே, ஆ, இயேசு லோ க மீ ட் ப ரே, ந ர கத் தி அ டி யா
(Nr. 18. தே வா வி யாகி ய கர்த் த ரே.)

ரை தொடா தே காரும் உம் மண்டை ஆ, வெற்றி சி றந் த ஆண்ட வ ரே.
(18. இ றங் கும் பர ம ஆ வி யே.)

2. ஆ, வெற்றிசிறந்த ஆண்டவரே,
இஸ்திரீயின் வித்தாம் இயேசுவே,
சர்ப்பத் தலையைத் தேவரீர்
மா பலமாய் நசுக்கினீர்;
ஆ, வெற்றிசிறந்த ஆண்டவரே.

3. ஆ, வெற்றிசிறந்த ஆண்டவரே,
மாசற்ற ஆட்டுக்குட்டியே,
இப்பஷா பலி என்றைக்கும்
பலன்களைக் கொடுக்கவும்; மு.

4. ஆ, வெற்றிசிறந்த ஆண்டவரே,
எங்கள் பிரதான குருவே,
நீர் பாவக்குற்றம் யாவையும்
மன்னித்திரக்கமாயிரும்; மு.

5. ஆ, வெற்றிசிறந்த ஆண்டவரே,
அடியார் சீவன் உம்மிலே;
உம்மாலே எங்கள் பாவமும்
கோரே சாவும் நீங்கவும்; மு.

6. ஆ, வெற்றிசிறந்த ஆண்டவரே,
மெய் ஆறுதல் உம்மில் உண்டே
எழுந்திருந்த உமக்கு
இஸ்தோத்திரம் உண்டாவது; மு.

A. Blomstrand (Hymn 73.)

## 18. பெந்தேகொஸ்தே ஜெபம் (O heiliger Geist).

1. தேவாவியாகிய கர்த்தரே.
கிலேசம் ஆற்றும் தைலமே,
பிதா குமாரனாலும் நீர்
அனுப்பப்பட்டிறங்கிநீர்.
இறங்கும் பரம ஆவியே.

2. நீர் தேவவசன நேசத்தை
வர்த்திக்கப்பண்ணி எங்களை
அதற்குக் கீழ்ப்படியவும்
பலமாய் ஏவிக்கொண்டிரும்.
இறங்கும் பரம ஆவியே.

3. இந்நெஞ்சை மெய்விசுவாசத்தால்
நிறையப்பண்ணும், ஏனென்றால்
ஆராகிலும் தன்னாலேதான்
சீர்பட்டு விசுவாசியான். மு.

4. அடியார் உமது வார்த்தையால்
வெளிச்சம் பெற்று, அதினால்
பிதாவையும் சுதனையும்
அறியக்கட்டளையிடும். மு.

5. நெருக்கமான வழியில் நீர்
சன்மார்க்கரை அழைக்கிறீர்;
உம்மாலே அதில் நாங்களும்
நடக்கவும் இருக்கவும். மு.

6. எல்லா இக்கட்டிலும் சாவிலு
நீர் எங்களில் தரித்திரும்; [ம்
எப்போதும் தேவரீருக்கு
கனம் வரக்கடவது. மு.

Fabricius (Hymn 89.)

Abr. Hinkelmann † 1695.

## 19. வாரும், தேவ ஆவி, வாரும் (Komm, o komm, du Geist).

1. { வாரும், தேவ ஆ வி, வாரும், எங்கள் ஆத்து மத் தி லே
எங் க ளுக்கு யி ரைத்தாரும், வாரும், சுத்த ஆ வி யே. } உம்மு டன் வெளிச்சமும் சீருஞ் சீ வ னும் வ ரும்.

2. எங்கள் நெஞ்சிலே நற்புத்தி
தேவ பயமும் வர,
அதை நீர் குணப்படுத்தி,
தப்புநினைவாகிய
யாவையும் அதில் நீரே
நீக்கும், தேவ ஆவியே.

3. மோட்சத்தின் வழியைக் காட்
சகல தடையையும் [டி,
நீக்கி, எங்களைக் காப்பாற்றி,
நல்லோராக்கியருளும்.
கால் இடறிற்றேயாகில்,
தூக்கந் தாரும் மனதில்,

4. நாங்கள் தேவ மைந்தரென்று
நீரே தினங்கு நாளிலும்
சாட்சி தந்ததிரை வென்று,
நெஞ்சைத் தேற்றியருளும்.
தேவ அன்பின் தண்டிப்பு
எங்களுக்கு நல்லது.

5. எங்களைப் பிதாவிடத்தில்
முழுப் பத்தியோடேயும்
சேரப்பண்ணி, ஆத்துமத்தில்
நீரும் கூப்பிட்டேயிரும்;
அப்போ கேட்டது வரும்,
நம்பிக்கையும் பெருகும்.

6. மனசெங்களில் கலங்கி,
சுவாமி, எந்தமட்டுக்கும்
என்று கெஞ்சும்போதிரங்கி,
அதை ஆற்றிக்கொண்டிரும்.
நிற்கவும் தரிக்கவும்
நீர் சகாயராயிரும்.

7. ஆ, நிலைவரத்துக்கான
சத்துவத்தின் ஆவியே,
பேயின் சூதுக்கெதிரான
ஆயுதங்களை நீரே
தந்து, நாங்கள் நித்தமும்
வெல்லக் கட்டளையிடும்.

8. விசுவாசத்தை அவிக்க
சத்துருக்கள் பார்க்கச்சே,
அதை நீர் அதிகரிக்க
பண்ணும், தேவ ஆவியே.
நாங்கள் பொய்யைப் பார்க்கி
தேவவாக்கை நம்பவும். [லும்

9. சாகுங்காலம் வந்தால், நாங்க
நித்திய மகிழ்ச்சியாய் [ள்
வாழப்போற மோட்சவான்க
என்றப்போ விசேஷமாய் [ள்
நிச்சயத்தை நெஞ்சிலே
தாரும், நல்ல ஆவியே.

Fabricius (Hymn 84.)

Joachim Neander † 1680.

## 20. சங். உகூ, அ. (Thut mir auf).

1. { அலங்கார வாசலாலே கோவிலுக்குட் போகிறேன்;
தேவ வீட்டின் நன்மையாலே ஆத்துமத்தில் பூரிப்பேன். } இங்கே தேவசமுகம், மெய் வெளிச்சம், பாக்கியம்.

2. கர்த்தரே, உம்மண்டை வந்த
என்னண்டைக்கும் வாருமேன்.
நீர் இறங்கும் போதனந்த
இன்பத்தால் மகிழுவேன்.
என்னுட இதயமும்
தேவ ஸ்தலமாகவும்.

3. பயத்தில் உம்மண்டை சேர
என் செபம் புகழ்ச்சியும்
நல்ல பலியாக ஏற
உமதாவியைக் கொடும்.
தேகம் ஆவி யாவையும்
சுத்தமாக்கியருளும்.

4. நல்ல நிலத்தில் விழுந்த
விதை பயிராகுமே.
அந்தப்படி நான் மிகுந்த
கனிகளைத் தரவே
வசனத்தைக் காக்க நீர்
ஈவளிக்கக் கடவீர்.

5. விசுவாசத்தை விடாமல்
அதில் பலப்படவும்,
ஒருக்காலும் தவறாமல்
உம்மை நான் பின்செல்லவும்
மெய் வெளிச்சத்தை நீரே
என்னில் வீசும் கர்த்தரே.

6. சொல்லும், கர்த்தரே, நான் கேட்பேன்;
நீர் இப்பாழ் நிலத்திலே
பெய்யப்பண்ணும் மன்னு சேர்ப்பேன்
நல் தியானத்துடனே;
தாரும் சீவ பானத்தை,
தீரும் பசிதாகத்தை.

A. Gehring (Hymn 5.)

Benjamin Schmolk, † 1737.

## 21. எபி. 4, 12. (Was ist die Macht).



2.

கர்த்தாவின் சுத்த வசனம்
மா கூர்மையான பட்டயம்;
சரீரம் ஆத்துமாவும் பேர்க்கும்,
ஊண் கணுவும் பிரிக்க ஏற்கும்,
நினைவை ஞாயந்தீர்க்கவும்
ஊடுருவும்:.:

E. Schaeffer.

3.

கர்த்தாவின் சுத்த வசனம்
மா பலமான முழக்கம்;
மலை பிளக்கும் பலமாக,
கல்லை உடைக்கும் சத்தமாக
கேட்போரின் செவி நெஞ்சிலும்
முழங்கிடும்:.:

4.

கர்த்தாவின் சுத்த வசனம்
நற்றைலம்போலே சுகிர்தம்;
எக்காயமும் அத்தாலே ஆறும்
எந்நோவும் அதினாலே மாறும்;
இதே சஞ்சீவி சாவிலும்
உயிர் தரும்:.:

E. M. Arndt, † 1860.

## 22. இரக்கம் பெற்றேன் (Mir ist Erbarmung).

1. இ ரக் கம் பெற்றேன் கர்த்த ரா லே, இ தற் கு நான் எம்மாத்தி ரம்! எ திர்த்தே னே் அ கந் தை யா லே
நான் மீட் கப் பட் ட தற் பு தம், நான்மீட்கப் பட் ட தற் பு தம். அத்தா லே பூ ரித் த டி யேன் இ ரக் கத் தைப்
பு க ழு வேன், இ ரக் கத் தைப் பு க ழு வேன்.

2. முன்னே நான் கோபத்துக்காளா
நின்றேன், இப்போதுகந்தவன்.[க
சுதனின் ரத்தத்தால் அன்பாக
ஒப்பரவாக்கப்பட்டவன் :.:
இப்பாக்கியத்தை எனக்கு
இரக்கமே அளித்தது:.:

3. பூலோகத்தாருக்கு முன்பாக
இதை அறிக்கை பண்ணுவேன்.
இரக்கம் ஒன்றை நித்தமாக
என் நெஞ்சில் வைத்து யோசிப்
பணிந்து களிகூருவேன், [பேன் :,:
இரக்கத்தைப் புகழுவேன் :.:

4. இரக்கத்தில் நான் நிலைக்கட்டும்,
அதே என் மேன்மை என்கிறேன்.
என் விசுவாசம் அதைப்பற்றும்,
அதை முன்னிட்டுவேண்டுவேன்:,:
அதே துன்னளில் என் பலம்
நான் சாகும்போதும் என் திடம்:.:

5. இரக்கமுள்ள ஸ்வாமி நீரே
இவ்வேழையைத் தள்ளாதேயும்,
என் மீட்பர் சாவால், தேவரீரே,
என் சாவில் என்னைச் சேர்க்கவும் :.:
இரக்கத்தை அங்கடியேன்
களிப்பாய் என்றும் போற்றுவேன் :.:

H. Bz. (Hymn 177.) Ph. F. Hiller.

## 23. இயேசுவின் சிறப்பு (Schönster Herr Jesu).

1. உன் ன த மா ன மா இ ரா சா வா ன சீர் சி றந் த இயே சு வே, உம் மில் க ளித் து

உம் மைத் து தித் து நே சித் துக் கொண்டி ருப் பே னே.

2. பூ மலர்க் காடும்
பயிர் ஓங்கும் நாடும்
அந்தமும் சிறப்புமாம்.
இயேசுவின் அந்தம்
எனக்கானர்தம்
என் மனதின் குளிர்த்தியாம்.

3.
அண்டங்கள் யாவும்
சூரியன் நிலாவும்
அந்தமாய்ப் பிரகாசிக்கும்;
அவர் முன்பாக
மா சோதியாக
மினுங்குமெல்லாம் மங்கிப்போம்.

4.
விண் மண்ணுடைய
மகிமை மறைய
அவர் அந்தமானவர்.
வானத்திலேயும்
பூமியிலேயும்
நான் நாடினோ என் ரட்சகர்.

A. Gehring.

## 24. உன்னதப் பாட்டு ௩, ௧—௩. (Wo ist Jesus, mein Verlangen).

1. என் பி ரி ய நே ச ரா ன இயேசு எங் கே தங்கு வார், அ வ ரண்டைசேர் வ தா ன வ ழி யை ஆர் காட்டுவார். பாவங் களின் சே னை யா லே என் ம னம் க லங் கு து. இயேசு எங்கே, அ வ ரா லே என் கி லே சம் நீங் கு து.

2. கண்ணீரோடெழுந்து நின்று
துக்கப்பட்டுக் கூப்பிட்டேன்;
ஓய்வில்லாமலும் திரிந்து
என் பத்தாவைத் தேடினேன்.
நேசரே, நீர் என்னை விட்டு
தூரமாயிராதேயும்;
வாரும், என்னைப் பூரிப்பித்து
ஆற்றித் தேற்றியருளும்.

A. Gehring.

3. என் வருத்தம் நோவு யாவும்
நெஞ்சின் பாரமும் எல்லாம்
திரள் பாவங்களும் சாவும்
அவரால் நிவிர்த்தியாம்.
ஆகையால் மா வாஞ்சையாக
அவரை அணைக்கவே
நான் ஓயாமல் நித்தமாக
தேடிக்கொண்டிருப்பேனே.

4. இயேசுவே, நீர் என்னை விட்டு
இனி மறையாதிரும்;
ஆ, என் பாவத்தை மன்னித்து,
என்னை உம்மண்டைக்கிழும்.
ஏழையின் முசிப்பை ஆற்றி,
என்னைத் தேற்றுவதற்கே
உம்மிடத்திலே காப்பாற்றி,
ரட்சியும், என் நேசரே.

## 25. சங்கீ. ௰அ, ௧. (Herr, ich lieb' dich).

1. உம்மைக்கர்த் தா, உம்மைக்கர்த்தா, முழுநெஞ்சால்நேசிப்பேன். உம்மைவிட்டுப் பி ரியா மல், மாயநே சத் தால் கெ டாமல்,
உம்மைப்பற்றிக்கொண்டி ருப்பேன், வே று நேசத்தை வெறுப்பேன். உம்மைக்கர்த்தா, உம்மைக் கர்த்தா, முழுநெஞ்சால்நேசிப் பேன்.

2. உம்மைக் கர்த்தா:,:
முழு நெஞ்சால் நேசிப்பேன்.
என் விருப்பம் யோசனையும்,
என் நடத்தை சிந்தனையும்,
ஏதேதென்னிலே கண்டாலும்,
அதை எல்லாம் நேசம் ஆளும்.
உம்மைக் கர்த்தா:,: மு.

3. உம்மைக் கர்த்தா:,:
முழு நெஞ்சால் நேசிப்பேன்.
தீங்குக்கென்னை ஒப்புவித்து,
என்னைத் தேற்றத் தாமதித்து,
நீர் மறைந்தால், வாஞ்சையாக
உம்மையே நினைப்பேனாக.
உம்மைக் கர்த்தா:,: மு.

4. உம்மைக் கர்த்தா:,:
முழு நெஞ்சால் நேசிப்பேன்.
மனதில் உம்மைச் சிந்தித்து,
வாயினால் அறிக்கையிட்டு,
இயேசுவே நான் நித்தமாக
உம்மைத் தோத்தரிப்பேனாக.
உம்மைக் கர்த்தா:,: மு.

H. Bz.

## 26. யோவான் 3, 16. (Gott ist die Liebe).

இருகூட்டங்கள் ஒன்றின்பின் ஒன்றாக — எல்லாரும்



1. கர்த் தர் சி நே கம், சு த னைத் தந்தார் அ வர் சி நே கம், ரட் சிக் கி றார். நான் மீண்டும் சொல் லுவேன்: அ வர் சி
2. ஐயோ, நான் பாவி, நான் கெட்டுப் போனேன், அ வர் இ ரக் கம் சி நே க மே.





நே கம், அ வர் சி நே கம், சி நே க மே.



3. என் நேச மீட்பர்
என்னண்டை வந்தார்,
என பாவக் குற்றம்
சுமந்தாரே.
நான் மீண்டும் மு.

4. அவர் என் மேய்ப்பர்
என் வானத்தப்பம்,
அவர் என் சோதி
என் பாக்கியம்.
நான் மீண்டும் மு.,

A. F. Wolff. A. Rische.

## 27. இயேசுவே, இயேசுவே, தேவரீர் மு.

முதல்முறை சிலர், பிற்பாடு எல்லாரும்



1. இ யே சு வே, இயே சு வே, தே வ ரீர் என் மீட் ப ரே, பா வக் குற்றத் தைச் சு மந் தீர், வ லு சர்ப்பத்






2. கர்த்தரே, கர்த்தரே,
தேவரீர் என் துர்க்கமே.
சத்துரு விரோதித்தாலும்,
வானம் என்மேல் விழுந்தாலும்,
தேவரீர் என் துர்க்கமே.

3. ராசனே, ராசனே,
தேவரீர் என் சீவனே.
சாவே, உனது கூர் எங்கே?
நரகே. உன் செயம எங்கே?
தேவரீர் என் சீவனே.

4. கிறிஸ்துவே, கிறிஸ்துவே,
தேவரீர் என் கன்மலை.
நான் பயப்படாதிருப்பேன்,
உம்மில் என்றும் ஊன்றி நிற்பேன்,
தேவரீர் என் கன்மலை.

A. F. Wolff, † 1884.

## 28. சங்கி. 23, 1 — 3. (Weil ich Jesu Schäflein bin).




2. அவரை நான் அண்டினேன்,
அவர் கோலால் பூரிப்பேன்.
எனக்கவர் ருசியான
மேய்ச்சலும் குளிர்த்தியான
தண்ணீர் ஊற்றும் காட்டுவார்,
பசிதாகம் தீர்க்கிறார்.

3. அவர் என்னை இம்மையின்
அருள் நாட்களுக்குப்பின்
மோட்ச மேய்ச்சலுக்கழைத்து,
மடியிலே சேர்த்தணைத்து,
பேணுவார். மகிழேனோ?
நான் மா பாக்கியன் அல்லோ.

H. Bz.

Louise v. Hayn, † 1782.

## 29. பிள்ளைகளின் ஜெபம் (Ich bin ein kleines Kindelein).




2. எனக்கொப்பாய், என் மீட்பரே,
ஓர் பிள்ளையாகி, நீர்
என் பாவம் சாவும் நீங்கவே
இரத்தம் சிந்தினீர்.

3. இவ்வன்புக்காய் நான் நன்றியை
செலுத்த உதவும்,
உமக்குப் பிரீதியானதை
எனக்குக் கற்பியும்.

4. எனக்குண்டான யாவையும்
நான் பலியர்ய்த் தாறேன்,
இரக்கமாய் என் நெஞ்சையும்
நீர் ஏற்றுக்கொள்ளுமேன்,

5. உமக்கு ஞானஸ்நானத்தில்
நான் புத்திரன் ஆனேன்,
குழந்தையாக மோட்சத்தில்
சுதந்தரம் பெற்றேன்.

6. நீர் என்னைச் சுத்தமாக்கினீர்,
பேய் என்னை மீளவும்
திண்டாப்படிக்குத் தேவரீர்
சகாயமாயிரும்.

H. Bz. (Hymn 214.)

## 30. தாலாட்டு (Nun schlaf, mein liebes Kindelein).

1. நீ சாய்ந்து தூங்கு, பிள்ளையே,
கண் மூடு, கண்ணே, நீ.
உனக்குப் பயமில்லையே,
கர்த்தாவின் கண்மணி.

2. பிதா உனக்கு வானத்தில்
உண்டவர் சிஷ்டிகர். [யில்,
மா ஸ்வாமி உன்னைக் காக்கை
ஆர் தீமை செய்பவர்.

3. குமாரன் உன்னை ரட்சிக்க
குழந்தையாய் வந்தார்;
நீ என்றும் மகிமை பெற
தாம் மாமிசமானார்.

4. அவரோடவர் தூதரும்
இறங்கி அவர் போல்
படுக்கும் பிள்ளை யாவையும்
சூழ்வார்கள், சுவர்போல்.

5. அவர் செந்நீரால் கொண்ட நீ
பிதாவின் வசமாய்
வளர உன் பெற்றார் இனி
பார்ப்பார்கள் கருத்தாய்.

6. தெய்வாவி உன்மேல் தங்கவும்,
உன் சிறுவத்திலே
உன்னை நடத்தி, என்றைக்கும்
காப்பாற்றிவரவே.

7. நீ சாய்ந்து தூங்கு, பிள்ளையே,
பின்னாலே நீயும் போய்,
ஆவியில் பலங்கொள்ளவே,
இப்போதஞ்சாமல் ஓய்.

H, Cordes. (Hymn 235.)

Joh. Mathesius. † 1565.

## 31. உம்மை, ராசா, விசுவாச (Sieh, hie bin ich, Ehrenkönig).

1. உம் மை, ரா சா, வி சு வா ச பத் தி யாய்ப் ப ணி கி றேன், தாழ்மை யோடும் கண் ணீ ரோடும் தே வ
நீ ரை அண் டி னேன். நீர் மண் ணா ன பாண் ட மா ன என் னை அன் பாய்ப் பா ரு மேன்.

2. என்னைச் சுத்த சீர்படுத்த
க்டாட்சம் பண்ணும், கர்த்தரே.
என்னைச் சொந்த ஆடாய்க் கொண்ட
மேய்ப்பரான உம்மையே
சேர்வேனாக, நீர் அன்பாக
என்னைப் பாரும், இயேசுவே.

3. தயவோடே நீர் உம்மோடே
ஐக்யமாம் எல்லாருக்கும்
ஈவதான இன்பமான
கடாட்சம் என்மேல் வரவும்.
யாவும் நீரே, தேவரீரே,
என்னைப் பார்த்துக் கடாட்சியும்.

4. ஆ, என் ஞானப்பொழுதான
தேவ ஆட்டுக்குட்டியே!
எனதாவி உம்மைத் தாவி
தேடும், மணவாளனே.
பட்சத்தோடும் தயவோடும்
என்னைப் பாரும், மீட்பரே.

5. ஏங்கலோடும் பணிவோடும்
என்னுடைய ஆத்துமம்
வாயும் நெஞ்சும் கூவிக் கெஞ்சும்
சத்தங் கேட்டென் சஞ்சலம்
தீர்ப்பீராக, நீர் அன்பாக்
என்னைப் பார்த்தால் பாக்கியம்.

6. உலகத்துப் பொய்ச் சம்பத்து
மாயையும் சிங்காரமும்
ஆன நல்ல செல்வம் அல்ல,
நெஞ்சை அது வாதிக்கும்.
மெய் வாழ்வான நீர் அன்பான
பார்வை தந்து ரட்சியும்.

Fabricius (Hymn 213.)

J. Neander, † 1680.

## 32. தேவரீர் என் உபகாரி.



2. சுதனே, நீர் உம்மைத் தாழ்த்தி,
பிள்ளையாக ஜென்மித்தீர்.
தேவரீர் என்மேல் இரங்கி,
ஜீவன் விட்டு ரட்சித்தீர்.
உமக்கே சங்கீர்த்தனம்,
என்றென்றைக்கும் ஸ்தோத்திரம்.

3. வாரும், பரிசுத்த ஆவி,
இயேசுவை நீர் காண்பியும்.
தேவரீர் என்மேல் இரங்கி,
என்னைச் சோடித்தருளும்.
உமக்கே சங்கீர்த்தனம்,
என்றென்றைக்கும் ஸ்தோத்திரம்.

A. F. Wolff. † 1884.

## 33. இயேசுவே, நீர் தாம் (Jesu geh voran).




2. தீங்கு மிஞ்சினால்,
எங்களை அன்பால்
கலங்காப்படிக்குக் காரும்,
நிலை நிற்கும் வரந் தாரும்.
இங்கே சிலுவை,
அங்கே மகிமை.

3. சொந்தக் கிலேசமும்
நேசர் துன்பமும்
நெஞ்சை வாதித்தால், அன்பாக
பொறுமை அளிப்பீராக.
சீவ கிரீடத்தை
நோக்க நீர் துணை.

4. நீர் இவ்வுலகில்
கஷ்ட வழியில்
எங்களை நடத்தினாலும்;
ஆதரியும், நாங்கள் மாளும்
போதும்மிடமே
சேரும், நேசரே.

H. Bz. (Hymn 192.)

Graf v. Zinzendorf, † 1760.

## 34. நான் மோட்சம் சேருமட்டும் (So nimm denn meine Hände).







2. என்மேல் உமதிரக்கம்
வைத்தருளும்,
அப்போ மனக்கலக்கம்
போய் ஒழியும்.
உமது பாதத்தண்டை
ஓய்ந்தடியேன்
கண் மூடி ஓர் குழந்தை
போல் நம்புவேன்

3. இருட்டின் வழியாக
போனாலும், நீர்
இலக்குக்கு நேராக
நடத்துவீர்.
நான் மோட்சம் சேருமட்டும்
தினம் நீரே
கை தந்தென்னை நடத்தும்
என் இயேசுவே.

H. Bz.

Julie v. Haussmann

## 35. மகா அருளின் சோதியை (Wie schön leucht uns der Morgenstern).

1. { ம கா அ ரு ளின் சோதி யை பாராட்டும் வெள் ளி எத் த னே பிர கா ச மாய் வி ளங் கும்.
தா வீ தின் மைந்தன், இயேசுவே, நீர், நீர் என் ம ண வா ள னே, என் பொக் கி ஷம் என் பங் கும். } மூற் றும்

சுற் றும் த ய வா லும் உண்மையாலும் நீர் நி றைந்தோர், மேன்மை நா ம மும் அ டைந் தோர்.

2. என் முத்தே, என் கிரீடமே,
உம்மோடே, தேவ பிள்ளையே,
நான் ஐச்யமாகவேணும்.
உயர்ந்த ராசா. உமது
நற்சுவிசேஷம் எனக்கு
அமிர்தம் பாலுந் தேனும்.
ஐயா, நைய [யாவும்
தேவ ரூபே, வாடாப் பூவே, நீரே
சீவ ஊற்றும் மெய் மன்னாவும்.

3. என் கெம்பே, வான அஸ்பியே,
மினுங்கி நிற்கும் நேசமே,
என் நெஞ்சில் ஒளிதாரும்.
நான் உமக்குள்ளே என்றைக்கும்
நிலைக்க, நீர் எந்நேரமும்
அன்பாக என்னைப் பாரும்.
ஆன ஞான
செல்வம் நீரே, தேவரீரே, நான் அறியும்
வாழ்வும் இன்பமும் கதியும்.

4. சிநேகமுள்ள பார்வையால்
அடியேனை நீர் நோக்கினால்,
பரம் வெளிச்சங்காட்டும்.
நீர் சொல்லும் இன்பச்சொற்களும்
தருஞ் சரீரம் ரத்தமும்
என் ஆத்துமத்தை ஆற்றும்.
தேற சேர [மையும்,
கிட்டும் என்னை நற்றிடனைத் தந்த
அன்புமாய் அரவணையும்.

5. பிதாவே, நீர் அநுதியில்
என்பேரிலே குமாரனில்
சிநேகம் வைத்த கர்த்தா;
குமாரன் என்னைத் தமக்கே
மணவி என்றன்புடனே
தெரிந்துகொண்ட பர்த்தா
மெத்த கெட்ட [தாமே
பாவியான என்னை வான கர்த்தர்
நோக்கினதிரக்கமாமே.

Fabricius (Hymn 152.)

6. கின்னரம் யாழும் வீணையும்
சங்கீதவாத்தியங்களுகம்
களிப்பாய்த் தொனிக்கட்டும்.
அன்புள்ள இயேசுவுடனே
நான் என்றென்றைக்கும் வாழ்வதே
என் ஆவியைத் திடத்தும்.
ஆடி, பாடி [ஓதும்
கிறிஸ்துதாமே நேசராமே என்று
சந்தம் இன்பமே எப்போதும்.

7. மகிழ்வேன், என் சிநேகிதர்
அல்பா ஓமேகா என்பவர்,
என் நேசர் ஆதியந்தம்,
இனி மோட்சானந்தத்திலே
நான் அவரண்டை சேர்வேனே,
என் பாக்கியம் அனந்தம்.
ஆமேன், ஆமேன். [காக
வா, ரட்சிப்பே, வா, கெலிப்பே, உனக்
வாஞ்சிப்பானேன், சேர்வாயாக.

Philipp Nicolai, † 1608.

## 36. ஆ, எங்கள்மேல் இரக்கம் (Ach bleib mit deiner Gnade).




2. இரட்சிப்பிங்கும் அங்கும்
கிடைக்க, மீட்பரே,
மெய்வேதம் காத்து, தங்கும்
அடியாரிடமே.

3. மெய்ப்பொழுதே ப்ரகாசம்
தந்தெங்களோடிரும்.
தப்பற்ற விசுவாசம்
எங்களைக் காக்கவும்.

4. ஆ, சுவாமி, ஆசீர்வாதம்
புரிந்து தங்குமேன்;
எல்லா வரப்ரசாதம்
பெருகப்பண்ணுமேன்.

5. ஆ, வேந்தரே, ஒதுக்கு
அளித்துத் தங்குமேன்;
பொல்லாரின் வற்மத்துக்கு
விலக்கிக் காருமேன்.

6. ஆ, உமதுண்மையோடு,
கர்த்தாவே, இங்கிரும்;
உறுதி தந்தத்தோடு
முடிய ரட்சியும்.

H. Bz. (Hymn 104.)

Josua Stegmann, † 1632.

## நம்பிக்கை விடாமல், ஆத்துமமே (Harre meine Seele).

1. நம்பிக்கை வி டா மல், ஆத் து ம மே, கர்த்தரை ஓ யா மல் பற்றிக் கொள்ளவே. ரட்சிக்கிறார்; உன்னைக் கை விடார்;
2. நம்பிக்கை வி டா மல், ஆத் து ம மே, கர்த்தரை ஓ யா மல் பற்றிக் கொள்ளவே. எத்துன்பமும் உன்னை மூ டி னும்

1. ராப்போனாப்போல் துன்பம் போகப் பண்ணுவார். தீ மை யில் காக்க ப லத் த வர் உன்னையும் தற் காக்கும் இ ரட் ச கர்.
2. கர்த் த ரின் ப லத் த கை இ ரட் சிக் கும். நித் தி ய கா லத் துணைவ ரே! என் னையும் தற் காரும், மா கர்த் த ரே.

A. Gehring. Friedrich Raeder † 1872.

## 38. என் இதயத்தில் ஒரு நாள் (Wenn ich zu Zeiten traurig bin).

1. என் இ தயத்தில் ஒருநாள் இம் மண் ணின் க வ லை க ளால் கலங் கை யில் என் இயே சுவை நினைத்தால்தா வி லை. ஆ, இந்தத்




2. அப்போது என்னை சுவாமியார்
மா தயவாய்க் கண்ணோக்கிஞர்,
பயப்படாதிரு, நாம் தாம்
உனக்குத் துணையாம்
என்ஞுற்றுவார். நான் உடனே
ஓர் கீர்த்தனத்தைப் பாடச்சே
கிலேசம் யாவும் போய்விடும்,
என் நெஞ்சு பூரிக்கும்.

3. இவ்வண்ணமாக இயேசுவின்
வெளிச்சத்தை நான் துக்கத்தின்
இராவில் கண்டு நெஞ்சிலே
அமர்ந்திருப்பேனே.
ஆகையினல் எந்நேரமும்
மகிழ்ச்சியாகிப் பாடவும்,
உன் நேசமுள்ள இயேசுவை,
என் உள்ளமே, நினை.

A. Gehring. R. Rudel.

## 39. சங்கீ. ௱௩௩. (Wie lieblich ist's hienieden).




2. எர்மோன் பனிக்கொப்பாக
எவ்வாசீர்வாதமும்
மகா ஏராளமாக
அவர்கள்மேல் வரும்:.:

3. புதிய சீயோனையும்
போய்ச் சேருவார்களாம்.
திட்டற்றுப்போம், சிறையும்
எல்லாம் தன்னீங்கலாம்:.:

4. இதோ வெளிச்சத்தண்டை
எச்சாதியாருமே
வருவதால் ஓர் மந்தை
ஓர் மேய்ப்பன் கீழ் ஆமே:.:

H. Bz. F. G. Wetzel.

## 40. நான் இயேசு மீட்பரில் விளங்கும் (Ich bete an die Macht der Liebe).

p — più f. — p — f — p

1. { நான் இயே சு மீட் ப ரில் வி ளங் கும் சி நேகத் தை வ ணங் கு வேன்;
என் னை இப் பூச் சி மேல் இ ரங் கும் மா அன் புக் கொப் பு ... ... ... ... ... விக் கி றேன். } என் னை ம றந் து ஆ ழ மா க இவ் வன் பி லே அ மிழ் வே ன் க.

2. மா தயவாய் என்மேல் மிகுந்த
விருப்பம் வைத்தீர், கர்த்தரே.
இந்நேசத்தாலே இழுப்புண்ட
என் நெஞ்சும் உம்மை நாடுமே.
உம்மால் தெரிந்துகொள்ளப்பட்டேன்;
உம்மைத் தெரிந்துகொள்ளக் கற்றேன்.

3. என் பங்கு நீர்; உம்மிலல்லாமல்
வேறெங்கும் பாக்கியம் காணேன்.
நான் லோகப் பொருளை நாடாமல்,
உம்மோடிருக்க ஏங்கிறேன்.
மெய் ஒய்வையும் மகிழ்ச்சியையும்
என் ஆவி உம்மில் கண்டடையும்.

4. என் மீட்பரே, மா ஆழமாக
விழுந்த என்னைத் தேவரீர்
அன்பாய் ரட்சிக்கிறதற்காக
உமதிரத்தம் சிந்தினீர்.
உமக்கென் இதயம் படைப்பேன்,
என்றைக்கும் உமக்கே பிழைப்பேன்.

5. உமது நாமம் கல்வெட்டாக
என்னில் பதியப்பண்ணுமேன்!
அதை என் நெஞ்சில் நித்தமாக
நான் பத்திரப்படுத்துவேன்.
ஆ, என் நடத்தை யாவிலேயும்
இந்நாமமே விளங்கச் செய்யும்!

6. பிதாவின் நெஞ்சம் இன்பமான
இந்நாமத்தில் திறந்ததே,
இதோ, மா ஆழ்ந்த கடலான
சிநேகம் வெளிப்படுதே.
ஆ, பாவியே, இவ்வன்புக்காக
நீ அவரை நேசிப்பாயாக!

7. ஆ, இயேசு, நேசத்தின் ஊற்றான
உமது நாமம் மேன்மையே
ஜெயித்தோர் யாரும் ஆழமான
இவ்வாற்றில் பானம் பண்ணச்சே,
என்றைக்கும் தாழ்ந்து பணிவார்கள்;
கை கூப்பி நின்று பூரிப்பார்கள்.

H. Bz.

G. Tersteegen, † 1769.

## 41. எசா. 52, 7. (Wie lieblich sind die Füsse).

1. நற்செய்தி அறி விக் கும் தூ தாட் கள் பா தங் கள் மா அந்த மே; ரட்சிக் கும் இச் செய் தி கே ளுங் கள்: செத் த விக் கிர கங் க ளை தள் ளி இயே சு கிறிஸ் து வை தொ {ழுங் கள், அ வர் கர்த் தர், சீ யோ னின் ஆண்ட வர்; ஆம் சே னை க ளின் கர்த் தர், சீ யோ னின் ஆண்ட ... ... ... வர்.}

2. தமது சாவினாலே
நம்மை இரட்சித்தார்,
பராக்கிரமத்தினாலே
பரத்துக்கேறினார்.
இந்தப்பலவானிடம்
வந்தால் மோட்ச பாக்கியம்.
அவர் சேனையின் கர்த்தர்,
சீயோனின் ஆண்டவர்;
ஆம் சேனைகளின் கர்த்தர்,
சீயோனின் ஆண்டவர்.

A. Gehring.

3. நானா சாதிகளான
பிதாவின் புத்திரர்
தேவாட்டின் பெரிதான
பந்தியில் சேர்பவர்.
பல பாஷைகளிலே
இந்தப் பாட்டொலிக்குமே:
அவர் சேனையின் கர்த்தர்,
சீயோனின் ஆண்டவர்;
ஆம் சேனைகளின் கர்த்தர்,
சீயோனின் ஆண்டவர்..

R. Rudel.

## 42. எழும்பெழும்பு நவமாக. (Wach auf, du Geist der ersten Zeugen).







2. ஆ, உமதக்கினி எரிந்து
எத்தேசமும் பரம்பச் செய்யுமேன்!
கர்த்தாவே, கிருபை புரிந்து,
நல் வேலையாட்களை அனுப்புமேன்!
இதோ, உமதறுப்பு, கர்த்தரே,
விஸ்தாரமாம், அறுப்போர் கொஞ்சமே.

3. உமது மைந்தன் தெளிவாக
இவ்வேண்டுதலைச் செய்யச் சொன்னாரே.
அத்தாலே எங்கும் தாழ்மையாக
உமது பிள்ளைகள் உம்மிடமே
சேர்ந்தும்மைக் கருத்தாக நித்தமும்
மன்றாடிக் கேட்பதைத் தந்தருளும்.

4. உமது மைந்தனே கற்பித்த [ரோ
இவ்விண்ணப்பத்தைத் தள்ளப் போவீ
உம்முடை ஆவி போதிவித்த
மன்றாட்டும்மாலே கேட்கப்படாதோ?
ஏன், நாங்கள் செய்யும் இந்தச் செபமே
உமது ஆவியால் உண்டானதே.

5. அநேக சாட்சிகளைத் தந்து
நற்செய்தி எங்கும் கூறப்பண்ணுமேன்!
சகாயராய் விரைந்து வந்து,
பிசாசின் ராச்சியத்தைத் தாக்குமேன்!
நீர் மகிமைப்பட எத்தேசமும்
உமது ராச்சியம் பரம்பவும்.

H. Bz. (Hymn 96.)

6. உமது சுவிசேஷம் ஓடி
பரம்பி, எங்கும் ஒளி வீசவே!
அஞ்ஞானிகளின் கோடாகோடி
அத்தாலே தீவரித்தும்மிடமே
வரக் கடாட்சித்திஸ்ரவேலையும்
உமது மந்தையில் சேர்த்தருளும்.

7. நமதிருதயத்துக்கேற்ற
நல்மேய்ப்பரை அனுப்புவோம் என்றீர்.
உமது வாக்கை நிறைவேற்ற
மகா உட்கருத்தாயிருக்கிறீர்.
எங்கள் மன்றாட்டு நிறைவேறிப்போம்
என்றையமற ஆமேன் என்கிறோம்.

C. H. v. Bogatzky, † 1774.

## 43. ஏசாயா கூ.

f நாலு பாடகர்

1. பி சாசின் ராச்சி யங் க ளை ஜெயித்துப்போட எ வ னை அ னுப் புவேன், என் தூதன் ஆர் என்றாண் ட வர் உரைக்கி றார்.

p ஒருவன் — f எல்லாரும் — ff

இதோ, கர்த்தாவின் ஊழியம் என்பாக்கியம், என் ரம்மியம்; என்னை அ னுப் பு மேன், அ னுப் பு மேன். என் னை அ னுப் புமேன், அ னுப் பு மேன்.

2. லௌகிக ஆசை யாவையும்
விட்டென்னை நீ பின்செல்லவும்,
என் நுகத்தடி மெதுவாம்,
என் சுமை லேசுமானதாம்.
இதோ, கர்த்தாவின் மு.

3. உன் சேவனைப் பாராமல் நீ
உன் சிலுவையை உத்தரி;
இவ்வுலகத்தின் நிந்தையை
உன் கிரீடமாக நீ நினை.
இதோ, கர்த்தாவின் மு.

4. கர்த்தாவின் சுத்த வசனம்
பிசாசை வெட்டும் பட்டயம்;
பூலோகம் எங்கும் போயினி
ஓயாமல் அதை அறிவி.
இதோ, கர்த்தாவின் மு.

5. நற்சேவகன் சுதந்தரம்
மோட்சானந்தத்தின் பாக்கியம்,
மாளா கிரீடம் பெறுவான்,
என்னோடென்றைக்கும் ஆளுவான்.
இதோ, கர்த்தாவின் ஊழியம்
என் பாக்கியம், என் ரம்மியம்; மு.

R. Handmann.

## 44. ஆ, இயேசுவின் போர் வீரரே (Wer will ein Streiter Jesu sein).

*mf* *p*

1. { ஆ, இயேசுவின் போர்வீரரே, நாம் தாமதிப்பானேன்?
எல்லாரும் போர்க்களத்திலே செல்வோம் வாருங்களேன்! }
{ இதோ நற்சிலுவை, - நற்சிலுவை!
சேர்வோம்இக்கொடியை, - இக்கொடியை! }
எக்காளசத்தம் கேட்கிறோம், போராடக்கடவோம்.

2. இங்கே கர்த்தாவின் பட்டையம்
என்றார்ப்பரிப்போமே.
மா தேவ மைந்தன் நம்மிடம்
துணையாய் நிற்பாரே.
வானோர் திரள் எல்லாம், - திரள் எல்லாம்
நமக்கொத்தாசையாம், - ஒத்தாசையாம்.
இப்பலவான் மெய்யாகவே
வெற்றி சிறப்பாரே.

3. போர் வீரனே, உன் சிலுவை
சுமந்துகொண்டு வா.
தீயம்பு நெஞ்சின் கோட்டையை
தொடாப்படிக்குக் கா.
இதோ நற்சேவகன், - நற்சேவகன்
பின்னால் நில்லாதவன், - நில்லாதவன்,
பிழைப்பின் சோலியில் சிக்கான்,
நன்றாய்ப் போராடுவான்.

H. Bz.

4. சர்வாயுதவருக்கத்தை
தரித்துக்கொள்ளவும்!
மெய்வேத சொல் பகைஞரை
பொல்லாப் பிசாசையும்
வெட்டும் நற்பட்டையம், - நற்பட்டையம்.
இதோ, உன் கேடயம் - உன் கேடயம்
மெய் விசுவாசம்; ரட்சிப்பேர
உன் தலைச்சோடல்லோ.

5. நீ சிலுவையின் வீரனாய்
ஜெயிக்க ஆண்டவர்
தாவீதின் பெலனை அன்பாய்
அளிக்கக் கடவர்.
போரில் நிலைத்திரு, - நிலைத்திரு;
ஜெயம் நெருங்குது, - நெருங்குது.
கிரீடம் ஜெயித்தோனுக்கே
பின் வைக்கப்பட்டதே.

## 45. கிருபையின் சூரியா (Morgenglanz der Ewigkeit).

1. { கி ரு பை யின் சூ ரி யா, நித் தி ய வெ ளிச் ச மா ன
   நீர் ப கல் உ திக் கி ற இப்போதெங்கள் மேலுண்டா ன } ரா வி ருள் அ னைத் தை யும் நீக் க வும்.

2. ஆதித்தாய் தகப்பனின்
பாவத்தாலே லோகமெங்கும்
மூடின மந்தாரத்தின்
விக்கினத்துக்கு இரங்கும்;
ஆ. ஒளி விடுவீரே,
இயேசுவே.

3. உமதன்புட பனி
மிசவும் வறட்சியான
நெஞ்சின்மேல் பெய்தருளி,
உமது விளைச்சலான
அடியார் எல்லாரையும்
ஆற்றவும்.

Fabricius (Hymn 217.)

4. உம்முடைய நேசத்தின்
இன்பமாம் அனலைக் காட்டி,
எங்கள் கெட்ட மனதின்
துர்க்குணத்தை அத்தால் மாற்றி,
அதைப் புதிதாகவும்
சிஷ்டியும்.

5. இயேசுவே, நான் பாவத்தின்
அவசுத்தத்தை வெறுத்து,
உம்முடைய நீதியின்
வெள்ளை அங்கியை உடுத்து,
அதை இன்றும் என்றைக்கும்
காக்கவும்.

6. நீர் வெளிப்படும் அன்றே
நாங்கள் மா சந்தோஷத்தோடே
மண் படுக்கைகளிலே
நின்றெழுந்திருந்தும்மோடே
சேர்ந்தும்மோடே என்றைக்கும்
தங்கவும்.

7. அழுகையின் பள்ளத்தை
தாண்டி, பரம கதிக்கு
போக நீரே எங்களை
கூட்டிக்கொள்ளும், அவ்வழிக்கு
நீரே எங்கள் சோதியும்
ஆகவும்.

Christ. Knorr von Rosenroth, † 1689.

## 46. நெஞ்சே, விழித்துப்பாடு (Wach auf, mein Herz, und singe).




2. இருளின் திகிலுக்கும்
பிசாசின் மோசத்துக்கும்
இராவில் அவர் தாமே
என்னைத் தற்காத்தோராமே.

3. அஞ்சாமல் சுகமாக
படுத்துக்கொள்வாயாக,
நாமே மறைப்போம் என்றீர்.
ரட்சிக்க வாக்கு தந்தீர்.

A. Gehring. (Hymn 222.)

4. நீர் சொன்ன வண்ணமாக
இப்போ நான் சுகமாக
புதுப்பகலைக் கண்டேன்,
பலி செலுத்த வந்தேன்.

5. ஆ, உமக்கென்ன தாறேன்;
எதைச் செலுத்த வாறேன்.
நான் பணிவோடு சொல்லும்
துதியை ஏற்றுக்கொள்ளும்.

6. நீர் அதைத் தள்ளீராக;
உமக்குப் பலியாக
பின் எதுவும் இராது,
வேறீவும் கிடையாது.

7. இந்நாளும் சேதத்துக்கு.
என்னைத் தற்காப்பதுக்கு
நற்றூதரை அன்பாக
துணைக்கு வைப்பீராக.

8. நான் என்ன யோசித்தாலும்,
எதைத் துவக்கினாலும்,
நீர் வாய்க்கப்பண்ணிவாரும்,
நல் முடிவையும் தாரும்.

9. என் நெஞ்சிலே தரித்து,
என்னை ஆசீர்வதித்து,
நீர் சீவ வார்த்தை சொல்லும்,
மோட்சத்தில் சேர்த்துக்கொள்ளும்.

P. Gerhardt, † 1676.

## 47. இளைப்பாறப் போகிறேன் (Müde bin ich, geh zur Ruh).



2. இன்று செய்த பாவத்தை
நினையாமல், நீர் அதை
கிறிஸ்தின் ரத்தம் சாவையும்
பார்த்தன்பாக மன்னியும்.

H. Bz. (Hymn 233.)

3. இனத்தாரை உமக்கே
கையளிப்பேன், கர்த்தரே.
பாலர் பெரியோரையும்
நீர் காப்பாற்றியருளும்.

4. துக்கம் நோய் உற்றோர்களும்
நன்றாய் ஒய்ந்து தூங்கவும்.
தூதர் காவல் தாருமேன்,
அப்போ நன்றாய்த் தூங்குவேன்.

Louise Hensel.

## 48. லூக். ௨௪, ௨௯. (Wo willst du hin, weil's Abend ist).







2. ஆ நேசரே, நீர் அடியேன்
விண்ணப்பத் துக்கிணங்குமேன்.
என் நெஞ்சின் வாஞ்சை தேவரீர்
ஒருவரே என்றறிவீர்.

3. பொழுது சாய்ந்து போயிற்று,
இரா நெருங்கிவந்தது.
மெய்ப்பொழுதே, இராவிலும்
இவ்வேழையை விடாதேயும்.

H. Bz. (Hymn 231.)

4. ஆ, என்னைப் பாவ ராத்திரி
பிடித்துக் கெடுக்காப்படி,
நீர் ஒளி வீசியருளும்;
ரட்சிப்பின் பாதை காண்பியும்.

5. நீர் என் கடை இக்கட்டிலும்
என்னோடிருந்து ரட்சியும்.
உம்மைப் பிடித்துப் பற்றினேன்;
நீர் போய் விடீர் என்றறிவேன்.

## 49. சங்கீ. ௱௪௬. (Lobe den Herren, o meine Seele).

1. { கர்த் தரைத் து தி, என் ஆத் து மா வே, நான் சாகு மட் டும் போற் று வேன்.
ஜீ வ னின் நாட்கள் எல் லாம், கர்த்தாவே, உம்மைப்பு கழ்ந் து பா டு வேன். } சரீ ரம் ஜீ வன் தந் த வர்

என் றும் து திக் கப் பட் ட வர். அல்லேலூ யா. அல் லே லூ யா.

2. அரசர் இஸ்திரியினால் பிறந்த
நரர் தான், மண் ஆவார்களே.
அவர்கள் யோசனையும் இறந்த
தினத்தில் வீணாய்ப் போகுமே.
நரர் ஒத்தாசை விருதா;
எங்கள் சகாயர் நீர் கர்த்தா.
அல்லேலூயா, அல்லேலூயா.

3. இயேசுவின் ஐக்யத்தில் நிலைநின்று,
யாக்கோபின் தேவனைத் தானே
தனக்கடைக்கலமாய்த் தெரிந்து
கொண்டோன் மெய்ப்பாக்கியன் ஆமே.
இக்கர்த்தர் பேரில் நம்பினோன்
ஞானமும் பெலனும் பெற்றோன்.
அல்லேலூயா, அல்லேலூயா.

4. பூமி சமுத்திரம் வானத்தையும்
எவ்வஸ்துவையும் சிஷ்டித்தார்.
வாக்குக்கொடுத்த எல்லாவற்றையும்
மெய்யாக நிறைவேற்றுவார்.
எல்லாவற்றிற்கும் ஆண்டவர்
நமக்கும் உண்மையுள்ளவர்.
அல்லேலூயா, அல்லேலூயா.

5. துன்பங்கள் அவநியாயத்தையும்
சகிப்போரைத் தற்காக்கிறார்.
ஏழைகளின் பசிதாகத்தையும்
குறைவில்லாமல் தீர்க்கிறார்.
கட்டுண்டோரை அவிழ்க்கிறார்;
பல இரக்கம் காட்டுவார்.
அல்லேலூயா, அல்லேலூயா.

6. குருடர் கண்களைத் தாம் திறந்து,
செவிடர் கேட்கப் பண்ணுவார்.
பெலனற்றோருக்குக் கையைத் தந்து,
எல்லாரையும் சிநேகிப்பார்.
திக்கற்ற பிள்ளை விதவை
யாவர்க்கும் அவரே துணை.
அல்லேலூயா, அல்லேலுயா.

H. Bz. (Hymn 247.)

7. அக்ரமக்காரர் பின்வாங்குவார்கள்,
அவர்களைக் கவிழ்க்கிறார்.
சொந்த வலைகளில் சிக்குவார்கள்,
கர்த்தர் கலங்கடிக்கிறார்.
சீயோனின் ராசா தேவரீர்
எங்களை என்றும் காக்கிறீர்.
அல்லேலூயா, அல்லேலூயா.

8. ஆண்டவர் அற்புதம் செய்வதற்கு
சமர்த்தர், அவர் என்றைக்கும்
புகழுக் கேற்றவர் என்பதற்கு
எல்லாரும் ஆமேன் என்கவும்.
பிதா குமாரன் ஆவிக்கும்
தோத்திரமே உண்டாகவும்.
அல்லேலூயா, அல்லேலூயா.

J. D. Herrnschmidt, † 1723.

## 50. எகோவா (Jehova).

எ கோவா, எ கோவா, எ கோ வா, உமக்கென்றும் து தி இஸ்தோத்தி ரம், ஆமேன், ஆ மேன். நீர் சொல்ல மு ழு லோக மும்

தூளாய்ப்போம் அம்மட்டுக்கும் இங்கொலிக்கும் பா டல்: நீர் சுத்தர், சுத்தர், சுத்தர் என் று டல். அல்லே லூ யா, அல்லே லூ யா.

H. Cordes. (Hymn 93.)

Pfeffel, † 1809.

## 51. களித்துப் பாடு. (Nun preiset alle).

1. களித்துப் பாடு, தேவ இரக்கத்தை நன்றாய்க் கொண்டாடு, மெய்ச் சபையே, உன்னை வரவழைத்துத் தயவாக தேடினோர் அன்பைத் துதிப்பாயாக, தேடினோர் அன்பைத் துதிப்பாயாக.

2. கர்த்தர் பலத்த-கையினால் ஆளுவர்,
புகழப்பட-அவரே தக்கவர்.
விண் சேனை பத்திப் பணிவாக
அவரைச் சூழ்ந்து துதிப்பதாக :,:

3. நிர்ப்பந்தமான-அஞ்ஞானக் கூட்டமே,
வெளிச்சம் காண-விழிக்க வேண்டுமே.
உன் மீட்பராலே எந்தத் தீங்கும்
பாவத்தின் தோஷமும் எல்லாம் நீங்கும்:,:

4. ஆகாரம் தாறார்,-தகப்பன் வண்ணமாய்
காப்பாற்றிவாறார்,-தினமும் திரளாய்
அவர் கை எவ்விடத்திலேயும்
பூரணமான இரக்கம் செய்யும்:,:

5. மெய்க் கூட்டத்தாரே,-கர்த்தரைப் பாடுங்கள்.
பூலோகத்தாரே,-துதிக்க வாருங்கள்.
இங்கினி பயமே இராது;
கிறிஸ்துவின் சபையே போற்றிப் பாடு:,:

A. Gehring. (Hymn 252.) A. von Löwenstern, † 1648.

## 52. தோத்திரிப்போம் (Danket dem Herrn).

ஒருவன் — எல்லாரும்

1. தோத் தி ரிப் போம்! ஆம், தோத்தி ரிப்போம், என், கர்த் தர் நல் லோர், அ வர் தயை என்றென்றும் உள் ள தே, என்றென்றும் உள் ள தே, என்றென்றும் உள்ள தே.

2. போற்றிடுவோம்!
ஆம், போற்றிடுவோம்.
அவர் அளித்த
நன்மைகளை ஒர்க்காலும் மறவோம்,
ஒர்க்காலும் மறவோம் :,:

3. வல்லோர் அவர்,
ஆம், சர்வவல்லோர்,
மா ஞானமுள்ளோர்.
அவர் தயை தினம் புதியதாம்,
தினம் புதியதாம் :,:

4. மாட்சியுற்ரோர்,
மெய் மாட்சியுற்ரோர்,
மா தூயர் கர்த்தர்.
எச்சிஷ்டியும் அவரைப் போற்றுது.
அவரைப் போறறுது :,:

5. கும்பிடுவோம்!
ஆம், கும்பிடுவோம்.
கர்த்தாவின் நாமம்,
மா பணிவாய் எக்காலுங் கூறுவோம்,
எக்காலுங் கூறுவோம் :,:

6. பாடிடுவோம்!
ஆம், பாடிடுவோம்.
களித்துக கூடி,
நாம் பாடும் பாட்டவருக்கேற்றதாம்,
அவருக்கேற்றதாம் :,:

H. Bz. — C. F. W. Herrosee, † 1821.

## 53. நான் திவ்விய செட்டைகளால் நித்தமே (Wo findet die Seele die Heimat).

a.

1. நான் திவ்விய செட்டைகளால் நித் த மே மறைக்கப்பட்டோய்ந்து வசிப்பதெங்கே? ஓர் பா வ மும் ஆ வி யை என்றும் தீண்டா
2. நான் இ னி இவ்வுலகில் தங்குவானேன், சிறந்த சு தே சத் துக் கேங்கு கிறேன். மே லான எ ரு ச லேம் என் ஆத் து மா

1. அடைக் க லம் உ ல கி லே இல் லே யா? இல்லே, இல்லே. இங்கில்லேயே, அ து ய ர நித் த வெ ளிச் சத் தி லே.
2. என் றைக் கும் சு கிக்கும் இ ருப் பிட மா? ஆ மாம், ஆமாம், அவ் வி ட மே என் ஆத்துமம் ஒய்ந்து வ சிக் க லா மே.

b. வேறு இராகம்.

3. ஆ இயேசுவோ டோய்வ து பாக்கிய மே! என், பா வ மும் சா வும்சேராதே அங் கே. என் ஆ வி க ளிக்க வா ஞே ரின் வீ ஊ




H. Bz. (Hymn 290.)

## 54. இயேசுவே, இயேசுவே (Lasst mich gehen).







2. ஒளிவே, ஒளிவே,
அருள் பூண்ட பொழுதே,
எல்லா நீதிமான்களோடும்
நான் உமக்கெதிர்கொண்டோடும்
நாள் கிட்டாதோ இப்போதே.

3. இனிமை, இனிமை,
தூதர் பாடும் கீர்த்தனை.
மண்ணை விட்டு விண்ணில் ஏற
இன்றைக்கே சீயோனில் சேர
செட்டை தந்தால் தாவினை.

4. அங்கே நான், அங்கே நான்,
சேரும்போது பாக்யவான்.
சீயோன் வீதி பொன் துலங்கும்,
தேவனே, அதில் விளங்கும்
மகிமை யார் சொல்லுவான்.

5. அமுதம், அமுதம்,
பரதீசின் பாக்கியம்!
சீவ மரத்தில் புசிப்போம்,
பரவசமாய்க் களிப்போம்.
என்னைச் சேரும் அவ்விடம்.

R. Handmann. (Hymn 291.)

G. Knak.

## 55. ஆ, உன்னத எருசலேமே, நீ (Jerusalem, du hochgebaute Stadt).

1. { ஆ, உன்ன த எ ரு ச லேமே, நீ என் மு ழுவாஞ்சைதான்.
{ வாஞ்சிப்பவன் விண் ஆ சை யால் இ னி தன் வ ச மா யி...... ரான். } உன்னையே நாடும் ஆ வி எவ் வ னம் நாட்டுக்கும் எம் மலைக் கு மேல் தா வி, இப் பூ மி யை வி டும்.

2. களிப்புடன் பிதாவின் வீட்டிலே
என் ஆவி சேரவும்,
உயிர்த்தெழும் பெரிய நாளுக்கே
அங்கே மறையவும்,
நான் அதை தெய்வ கைக்கும்
மாறாத உண்மைக்கும்
ஒப்புக்கொடுத்து வைக்கும்
நன்னாள் எப்போ வரும்.

3. அச்சணத்தில் இப்பார தேகத்
களைந்த ஆத்துமம் [தை
மா வேகமாய் எழுந்தாகாசத்
கடக்கும், நிச்சயம். [தை
தூதாக்களின் கரத்தில்
எடுக்கப்படச்சே,
எலீயா வாகனத்தில்
பரத்துக் கேறுமே.

4. பரத்திலே மின்னும் ஊர் வாசல்கள்
இப்போ தெரியுமே.
நான் வெகுநாள் ஆசித்த மெய்மைகள்
காட்சிக்குத் தோன்றுதே,
பூமியின் மாயை போக
வேண்டுமென்றேங்கினேன்,
இப்போது பரலோக
மெய்ப் பேறு பெறுவேன்.

5. மா கூட்டமாய் எனக்கெதிர்கொண்டே
வரும் சிறந்தோர் ஆர்?
முன் பூமியின் உப்பாம் இவர்களே
இப்போ முடி பெற்றார்.
மகிழ்ச்சியாய் இப்போது
இச்செயக்கூட்டமே
என்னைச் சிநேகத்தோடு
அங்கேற்றுக்கொள்ளுமே.

6. பூர்வீகராம் தீர்க்கதரிசிகள்
மகாத்துமாக்களும்
வாதைக்கஞ்சாக் கிறிஸ்துவின் சாட்சிகள்
மெய்ப்பக்தர் யாவரும்
சிறப்பாய் அசைவாடி
தென்படுவார், இதோ;
வெளிச்சத்தில் கொண்டாடி
ஆள்வார்கள் அல்லவோ.

7. கடைசியாய் நான் பரதீசிலே
உட்பட்ட பிறகு [பொங்குதே,
சந்தோஷத்தால் என் மனம்
என் வாய் துதிக்குது.
இனி என் அல்லேலூயா
என் ஓசியன்றோவும்
வானோர்கள் பாட்டின் தூய
இன்பத்தோடிசையும்.

H. Cordes, (Hymn 286.)

8. ஆதியிலும் இப்போதும் என்றைக்
இருக்கும் வண்ணமாய் [கும்
இஸ்தோத்திரம் வானங்கள் யாவி
ஒலிக்கத் தக்கதாய் [லும்
கோடா கோடியர் நாக்கும்
வாத்திய ஓசையும்
எச்சீவன்களின் வாக்கும்
ஆர்ப்பரித்தே வரும்.

J. M. Meyfart, † 1642.

## 56. பரத்தை நாடிப்போக (Fort, fort mein Herz).

1. { பரத்தை நாடிப்போக நெஞ்சே விழித்திரு,
இனி பொய்யான லோக வாழ்வை வெறுத்திரு. }
சீயோனின் மேன்மையான வர்சஸ்தலங்கள் காணவிருப்பம் இல்லையோ? பரத்தை நாடிப்போ.

2. கட்டுண்டாயோ, அத்தாலே
அஞ்சாதே, ரட்சகர்
தம் மரணத்தினாலே
உன் கிலேசம் நீக்கினர்.
உன் கட்டவிழ்க்கக் கர்த்தர்,
ஒருவரே சமர்த்தர்,
அவரை நம்பாயோ?
பரத்தை நாடிப்போ.

3. பிதா இரக்கமாக
எதிர்கொண்டோடுவார்,
உன்னை எப்போதுமாக
மேன்மைப் படுத்துவார்.
இரட்சகர் அளிக்கும்
மெய் நீதிக்கும் சுதிக்கும்
நீ ஆசைப்படாயோ?
பரத்தை நாடிப்போ.

4. தேவாட்டுக்குட்டியான
பெரிய நேசரே,
சீயோனின் பாக்யமான
குடிகள் நடுவே
உம்மை இஸ்தோத்திரிக்க
இங்கின்னம் தாமதிக்க
மனம் இருக்குமோ?
பரத்தை நாடிப்போ.

A. Gehring.

5. ஆனால் என் வாஞ்சை யாவும்
தெய்வீக சித்தத்தில்
அடங்க நீர் உசாவும்,
கர்த்தா, இவ்வுலகில்
உமதழைப்புக்காக
நான் காத்திருப்பேனாக.
உம்மை நான் நம்பினேன்,
நீர் என்னை ஆற்றுமேன்.

## 57. வானவர்க்கு மா தித்திப்பின் (Unter Lilien).

1. வா ன வர்க் கு மா தித் திப் பின், மா க ளிப் பின் பூ ர ணம் இ ருக் கு தே. அ தில் பங் கெ னக் குண் டா க, ப ணி வா க வேண் டு வேன், என் இயே சு வே.

2.

அப்படி வராப் படிக்கு
எந்தச் சிக்கு
காணப்பட்டும், அதையே
நீரே நீக்கிப்போட வாரும்,
என்னைக் காரும்,
தயவுள்ள கர்த்தரே.

3.

நேர் வழி எனக்குண்டாக
நீர் அன்பாக
என் சகாயராயிரும்.
தேவரீரினுல் நான் தேற,
கரையேற
நீர் சகாயத்தைக் கொடும்.

4. இந்த லோகத்தின் வாழ்வெ
நன்மை என்ன, [ன்ன,
குப்பையாயிருக்குதே.
எனக்கிது பரதேசம்,
இது கிலேசம்
வரப்பண்ணுங் காடாமே.

5. இயேசுவே, என் எசமானே,
உம்மைத் தானே
எனதாவி தேடுதே.
என்னை அங்கே வரப்பண்ணும்,
ஆ, அன்றன்றும்
வெற்றி தாரும், கர்த்தரே.

6. உமக்குப் பலமுண்டாமே,
உம்மாலாமே,
எனதாவிக்கு உண்டாம்
துக்கத்தை எல்லாம் நீர் ஆற்றி,
அதை மாற்றி
பூரிப்பாக்க உம்மாலாம்.

7. என்தாக்கினை உம்மாலே
தீர்ந்ததாலே
திகில் என்னை விடுதே.
சாவின் கூர் உடைந்ததா .
சாவினுலும் [லும்
பயம் ஒன்றும் இல்லையே.

8. உம்மை முழு மனதாலும்
ஆவியாலும்
நேசிக்க விரும்பினேன்.
உம்மை என்றைக்குந் துதிப்பேன்,
தோத்திரிப்பேன்,
அங்கே என்னைச் சேருமேன்.

Fabricius (No. 324). L. K. Allendorf, † 1773.

## 58. ஓ, எருசலேமியாரே (Wachet auf, ruft uns die Stimme).

1. { ஓ, எ ரு ச லே மி யா ரே, வி ழி யுங்கள், மெய்மார்க்கத்தா ரே, இப்பா தி ராத்தி ரி யி லே
பத் தா வாறார்; வே க மா க எ ழுந் தி ருங் கள், புத் தி யா க இருக்குங்கன்னிகள் எங்கே. } தீ வட் டி க ளை யே

எ டுத்தெ திர்கொண்டே போம்நே ர மாம் என் றி ர வில் அ லங்கத் தில் நிற் பாரின் கூக்கு ரல் உண்டாம்.

2. சீயோன் என்ற மணவாட்டி
மகா மனமகிழ்ச்சிக் காட்டி,
விழித்தெழுந்திருக்கிறாள்.
அவள் நேசர் மேன்மையோடும்
சிநேகத்தோடும் தயவோடும்
வெளிப்படுகிறதினால்
கிலேசம் நீங்கிற்று.
ஆ, ஸ்வாமி, உமக்கு
ஓசியன்னா,
அடியாரும்
கம்பீரிக்கும்
கதிக்கு வாறோமே, கர்த்தா.

3. சுரமண்டலங்களாலும்
நரர் தூதாக்கள் நாவினாலும்
துதிக்கப்பட்டோர் தேவரீர்.
மோட்ச ஊர் மகா மினுக்கு
நீர் எங்களை வானோர்களுக்கு
உம்மாலே தோழராக்கினீர்.
அவ்வாழ்வைக் கண்டோர் ஆர்,
காதாலே கேட்டோர் ஆர்,
நாம் உன்னத
சந்தோஷமும்
மகிழ்ச்சியும்
அடைகிறோம், அல்லேலூயா.

Fabricius (Hymn 283). Philipp Nicolai, † 1608.

## 59. ஒப்பில்லா திரு இரா (Stille Nacht).

*p* *pp* *p* *pp* *p* *pf* *pp*

1. ஒப் பில் லா தி ரு இரா! இ தில் தான் மா பி தா ஏ க மைந் த னை லோ கத்துக்கு மீட் ப ரா க அ னுப் பி ன து அன்பின் அ தி ச ய மாம். அன்பின் அதி ச ய மாம்.

H. Bz.

2. ஒப்பில்லா - திரு இரா!
யாவையும் - ஆளும் மா
தேவ மைந்தனுர் பாவிகளை
மீட்டு விண்ணுக்குயர்த்த, தம்மை
எத்தனை தாழ்த்துகிறுர். ::

2. ஒப்பில்லா - திரு இரா!
சென்மித்தார் - மேசியா.
தெய்வதூதரின் சேனைகளை
நாமும் சேர்ந்து, பராபரனை
பூரிப்பாய்த் தோத்திரிப்போம். ::

## 60. ஜெயித்த இயேசு சுவாமியார் (Gen Himmel aufgefahren ist).

1. ஜெயித் த இயேசு ஸ்வா மி யார், அல் லே லூ யா, இன்றே பரத்துக் கேறி னர். அல் லே லூ யா.

2. பிதாவின் பக்கத்தில் அவர்,
அல்லேலூயா,
விண்மண்ணை ஆளும் அரசர்.
அல்லேலூயா.

3. தாவீதிதே முன் சொன்னது, அல்.
அதிப்போ நிறைவேறிற்று. அல்லே.
4. பிதாவோடுளுக்கார்ந்தாரே, அல்லே.
பகைஞர் கீழ்ப்படத்தானே. அல்லே.

5. அத்தாலே ஆர்ப்பரிக்கிறோம், அல்லே.
களிப்பாய்க்கிறிஸ்தைப் போற்றுவோம். அ.
6. திரியேகருக்கிஸ்தோத்திரம், அல்லே.
கனம் புகழ்ச்சி கீர்த்தனம். அல்லேலூயா.

Fabricius (Hymn 75.)

Melchior Franck, † 1639.

## 61. சிஷ்டிகருக்கு (Danket dem Schöpfer).

*mf*

1. சிஷ் டி க ருக் கு தோத்திரம் பு கழ்ச் சி! அ வ ரின் நே சம் மா பெ ரி ய தா மே.

*cresc.*

மைந் த னைத் தந் த ப ர ம பி தா வை போற்று வோ மா க.

2.

ரட்சகருக்கு
தோத்திரம் புகழ்ச்சி!
கிறிஸ்து கெட்டோரை
தேடி ரட்சித்தாரே.
நாம் ஒருமித்து,
அவரைத் துதித்து
போற்றுவோமாக.

3.
தேற்றரவாளன்
தோத்திரிக்கப்பட்டோர்,

திருச் சபையை
கிறிஸ்துவண்டை காப்பார்,
சற்குருவான

ஆவியை எல்லாரும்
போற்றுவோமாக.




Fabricius.

## 62. ஆ சுவாமி, இயேசு கிறிஸ்துவே (Die Sach ist dein Herr Jesu Christ).

1. ஆ சுவா மி, இயேசு கிறிஸ்துவே, அ டி யார் நிற் கி ற
இவ் வே லை உம் மு டையதே, அ தை நீர் அ ழி ய
ஒட் டீர். கோதும்பை ம ணியோ
வெ ளிப்பட்டோங்குமுன் இதோ,
சன் மே னி யைப் பு வி யி லே இ ழந் து சா க வேண்டுமே, பு வி யி லே முன் சாகவேண்டு மே.

2. ஆ சிலுவையின் வழியாய்
உயர்ந்த சிரசே,
இதெங்களையும் நீர் மேலாய்
உயர்த்தும் வழியே.
அடியாருக்குப் பாட்டிலும்
உமது மகிமையிலும்
நீர் பங்களித்து, எங்களை
ராவழியாய் ஒளியண்டை
உயர்த்துமேன்,
உம்மோடுயர்த்துமேன்.

H. Bz.

3. விதைக்கப்பட்டு மீளவும்
எழுந்த மீட்பரே,
நீர் லோகத்தை உயிர்ப்பியும்,
அதும்முடையதே.
உமது மேன்மை நாமத்தை
அதறிய நீர் தூதரை
அனுப்பும். அடியாருக்கும்
இவ்வேலைக்குண்மை அருளும்.
போராடியே
அதில் உழைப்போமே.

v. 1 - 2 Preiswerk,
v. 3 Zaremba.

## 63. வெளிச்சம் உண்டாகக்கடவது. க மோ. க, ௩. (Fiat lux).

*Maestoso.*

1\. கர்த் தா, நீர் சொல்ல வே, இ ருள் அச் ச ண மே நீங் கிற் றல் லோ; அஞ்ஞா ன இ ரு ளை நீக் க, நீர் இ ரு ளை சூர்ந்து, வெ ளிச் சத் தை அ ரு ளீ ரோ.

2\. கிறிஸ்துவே, சயவாய்
லோக வெளிச்சமாய்
வந்த கர்த்தா,
ஆத்தும ரோசமும்
இருளும் நீங்கவும்
அருள் உதிக்கவும்,
சேர்ந்தாளுக.

3\. நேசத்தின் ஆவியே,
ஜீவ வெளிச்சமே,
வீசிடுமேன்;
குணப்படுத்தவும்
கிறிஸ்தண்டை சேர்க்கவும்
ஜீவனைத் தரவும்
நீர் சேருமேன்.

4\. தூய திரியேகரே,
நித்திய சோதியே,
தீவிரியும்;
ஒளி பிரகாசமாய்
தோன்றுக என்பதாய்
குமுறல் சத்தமாய்
கற்பித்திடும்.

H. Bz. (Hymn 99).

From the Swedish.

## 64. உம்மைத் தேவதூதரோடும் (Preis dem Vater).




2. லோகத்துக்கிரக்கமாக
மைந்தனை நீர் மீட்பராக
தந்ததற்கு என்றைக்கும்
தூதர் சேனை மீட்கப்பட்ட
நரர் கூட்டத்தோடொப்பற்ற
உமதன்பைப் புகழும்.

H. Bz.

## 65. பொன்னும் லோக செல்விக்கையும் (Alles ist an Gottes Segen).

(முந்தின இராகம், அல்லது Bavarian Tune - Book No. 11).

1. பொன்னும் லோக செல்விக்கையும்
அல்ல, தேவ கிருபையும்
ஆசீர்வாதமும் நன்றே.
கர்த்தரை மெய்ப் பக்தியாக
நம்புவோன் எல்லாம் மெய்யாக
பயமற்று நிற்பானே.

2. என்னை அன்பாய்ப் போஷிப்பித்து
வெகு நன்மையை அளித்து
வந்தவரை நம்பேனோ?
என்னை ஆச்சரியத்தோடு
முன் நடத்தினோர் இப்போது
என்னைக் கைவிடுவாரோ?

3. கவலைகளால் நிரப்பும்,
மன கிலேசத்தைக் கிளப்பும்
நிலையற்ற பொருளை
வெகுபேர்கள் இச்சித்தாலும்,
நான் விரும்புவதோர்க்காலும்
மாறா தேவ கிருபை.

4. கர்த்தருக்கென் விருப்பங்கள்
ஏற்றிருந்தால் என் ஜெபங்கள்
வாய்க்கும் என்று நம்புவேன்.
அவருக்கென் ஆவியையும்
தேகத்தையும் சீவனையும்
எல்லாம் ஒப்புவிக்கிறேன்.

5. அவர் வேளை வரும்போது
என் குறைகளை அன்போடு
நிறைவாக்க அறிவார்.
நானோ வேளை வழியையும்
குறிக்கேன், எல்லாவற்றையும்
தருவாயில் செய்கிறார்.

6. சேவனோடென்னை வைத்தாலும்,
தம்மண்டைக்கழைத்திட்டாலும்,
அவர் சித்தம் நல்லது.
இந்த உலகம் அழியும்,
மாளா ஆஸ்தியும் கதியும்
விண்ணில் வைத்திருக்குது.

H. Bz. (Hymn 135).

## 66. எருசலேம், எருசலேம் (Jerusalem, Jerusalem).

*cresc.* *p*

1. எ ரு ச லேம், எ ரு ச லேம், உ யர்ந் த ந க ரே, கர்த் தாவின் வா சஸ் தா ன மே, பூ லோ க மோட் ச மே,
நீ பா ழ டைந் த ப டி யால் வி சா ர மா கி றோம்; உன்னை நி னைக்கும் போதெல்லாம் கண் ணீர் வி டு கி றோம்.

2. முன்னாள் உன் மக்கள் கர்த்தரை சீயோனில் பாடினார்;
இப்போ பயந்தொடுக்கமாய்ப் புலம்பி நிற்கிறார்;
உன் மேன்மை யாவும் போயிற்று, உன் தாழ்வு யாவையும்,
கண்டெங்கள் கண் கலங்கிப்போய் கண்ணீரைச் சொரியும்.

3. எருசலேம், எருசலேம், மனந்திரும்பாயோ,
நீ கொன்ற ஆட்டுக் குட்டியை அங்கிகரிக்காயோ.
நீ இயேசுவை உன் மேசியா என்றண்டுமளவும்
எக்காலும் எங்கள் மனது வியாகுலப்படும்.

S. G.

## 67. எபி. ௪, ௯. (Es ist noch eine Ruh vorhanden).

*p* *mf*

1. { மெய் யோய் வங் கின் னும் வைத் தி ருக் கும், இ ளைத் த நெஞ் ச மே தெ ளி. } { ஸ்த லத் தை
{ கட் டுண் டி ரு ளி லே ப டுக் கும் நீ துக் கி யா தி ரு இ னி. } { உன் போ ரும்

ஆ யத் தப் ப டுத் த முன் போ ன உன் இ ரக் க முற் ற கர்த் தா வை நோக் கக் க ட வாய்.
ஓட் ட முட் கஸ் தி யும் மா சீக் கி ரத் தி லே மு டி யும், அப் போ துன் ஓய் வில் சே ரு வாய்.

2. பிதா ஓர்க்காலும் முடியாத
இவ்வோய்வை மனுப்புத்திரர்
உண்டாகுமுன் அளவில்லாத
அன்பாலே முன்குறித்தவர்.
'அதைச் சம்பாதிப்பதற்காக
தேவாட்டுக்குட்டியாகச் சாக
இரட்சகர் மனங்கொண்டார்.
இளைத்தவர்களை இப்போது
அவர் மிகுந்த பட்சத்தோடு
இவ்வோய்வுக்கு அழைக்கிறார்.

3. பல சுமைகளைச் சுமந்து
தியங்கும் ஆத்துமாக்களே,
விசாரம் யாவையும் மறந்து
கலக்கம் பயமின்றியே
வாருங்கள்; பகல் பாரத்தையும்
அகோரமான வெயிலையும்
சகித்த உங்களைத் தள்ளார்.
குற்றஞ் சிவேரென்றிருந்தாலும்,
பிசாசு லோகம் சீறினாலும்,
கெட்டோரைச் சேர்த்துத் தேற்றுவார்.

4. அங்கே தான் துக்கத்தைத் தொலைத்து
நாம் ஓய்வோம் சமாதானத்தில்.
இளைத்தோரே, இதை நினைத்து
படுங்கள் அவர் மடியில்.
ஜெயித்தோர் கூட்டத்தை நாம் சேர,
தடையில்லாமல் அங்கே ஏற
சிறகிருந்தால் வாசியே.
என் ஆவியே, அங்கே களித்து
ஜெயங் கொண்டாடத் தீவிரித்து
எழும்புன் ஓய்வு கிட்டிற்றே.

H. Bz. (Hymn 289). I. S. Kunth † 1779.

## 68. உமது சமாதானம் தாரும் (Umschliess mich ganz mit deinem Frieden).

(முந்தின இராகம்.)

1\. உமது சமாதானம் தாரும்,
என் ஆத்துமத்தின் நேசரே;
உம்மைக்கியத்தில் என்னைக் காரும்,
உமக்கேற்கா யாவையுமே
வெறுக்கப்பண்ணும். நேசத்தாலே
நீர் சிலுவையில் மாண்டதாலே
உண்டான ஜீவன் ஒன்றையே
விரும்பி, சிலுவை லேசான
சுமை என்றெண்ணும் பணிவான
மனம் அளியும், மீட்பரே.

2\. உம்மைக்கியத்திலே ருசிக்கும்
இச்சமாதானம் என்றைக்கும்
நான் சாங்கோபாங்கமாய் வசிக்கும்
என் துர்க்கமாயிருக்கவும்.
இப்பாக்கியத்துக்கொப்பிராது,
அதொரு புத்திக்கும் எட்டாது.
அதை ஆராய்ந்தும், அறியேன்.
என் சமாதானம் தேவரீரே
என்றென்னைப் போதிவிக்க நீரே
தேவாவியை அளியுமேன்.

3\. குலை பதைக்கிற வரைக்கும்
இச்சமாதானத்திலே நான்
நிலைத்தென் வார்த்தை சிந்தனைக்கும்
செய்கைகளுக்கும் அதுதான்
ஆதாரமாகிறதற்காக
எனக்கொத்தாசை செய்வீராக.
நான் விண்ணுக்காயத்தப்பட,
மண்ணை வெறுக்கும் சிந்தையாலும்
உமது திருச்சாயலாலும்
அடியேனை நீர் சோடிக்க.

4\. அல்லேலூயா, துணிவேனாக,
இக்கட்டு சாவின் வழியாய்
உம்மை, கர்த்தா, பின்செல்வேனாக.
இதோ, உமக்கானினமாய்
நான் சிலுவையின் பாரத்தையும்
அத்தால் அடையும் கனத்தையும்
சந்தோஷமாய் எடுக்கிறேன்.
நெருக்கம் யாவிலும் துணைக்கு
நீர் வந்து, என்னை உம்மண்டைக்கு
உயர்த்துவீர் என்றறிவேன்.

H. Bz. G. Clemens † 1776.

## 69. சமோ. சுா, உசா - உகா. (Segne und behüte).




2\. எங்களுக் கன்றன்று
சமாதானம் தந்து
கிறிஸ்தைக் காட்டிப் போதிக்கும்
உமதாவியைக் கொடும்.

3\. எங்கள் மீட்பரான
இயேசுவின் மேலான
நாமத்துக்குமகிமை.
ஆமேன், கேட்பீர் ஜெபத்தை.

H. Bz. (Hymn 11.)

## 70. *Canon* (Gloria in excelsis).

1 ம கி மை ம கத் து வம் உன் ன த ப ரா ப ரர்க் கே, 2 ச மாதா னம் இணக்க மும் பூமி யில் உண் 3 டா யிற் றே, பி ரி ய மும் த ய வும் ம னி தர் பேரில் இ ருக் கு மே.

C. J. Sandegren.

## 71. விண் மண் ணுக்காண்டவா (God save the King).

*mf* 1. விண்மண் ணுக்காண்டவா, தே சத் தை ஆளும் மா ரா சா வைக் கா. *f* எங்கெங்கும் வெற்றி யும் *mf* செல்வம் நற் கீர்த் தி யும் பெற்றென் றும் ஓங் க வும் ரா சா வைக்கா.

2. ராசாதி ராசனே,
பகைஞர் மாளவே
ஒத்தாசை தா.
சதி துரோகமும்
அவத்தமாகவும்,
நல் ராசா வாழவும்
ரட்சிக்க வா.

3. கர்த்தா, பேர் கிருபை
ராசாவுக்கிந்து வை,
ராசாவைக் கா.
வாழ்ந்து பிழைக்கவும்,
செங்கோல் தழைக்கவும்,
தேசம் செழிக்கவும்
ராசாவைக் கா.

A. Gehring.

H. Carey † 1743.

## 72. கூடிவந்த நாங்கள் (Die wir uns allhier).

{ கூ டி வந் த நாங் கள் ஏ க மா க பா டு பட் ட உ மக் கே
{ உண் மை யா யி ருக் க ப ணி வா க வாக் களிப் போம் மீட் பரே. } நீரோ ஸ்வாமி ஆமேன் என்று சொல்லும், எங்கள் வாக்கை

அன்பாய் ஏற்றுக் கொள்ளும். ச மா தா னம் என் றைக்கும் அ டி யா ருக் க ரு ளும்.

O. R. Hdn. (Hymn, 62.)

Zinzendorf, † 1752.

## 73. சபையின் அஸ்திபாரம். (The Church's one foundation).

1. ச பையின் அஸ்தி பா ரம் நன் மீட் பர் கிறிஸ்துவே, ச பை யின் ஜன் மா தா ரம் அ வ ரின் வார்த்தை யே;

தம் ம ணவாட்டி யா க வந் த தைத் தே டி னார், த மக்குச் சொந்த மா க ம ரித் ததைக்கொண்டார்.

2. எத்தேசத்தார் சேர்ந்தாலும்,
சபை ஒன்றே ஒன்றும்;
ஒரே விஸ்வாசத்தாலும்
ஒரே ரட்சிப்புண்டாம்;
ஓர் நாம நமஸ்காரம்
இணைக்கும் சபையை;
அதற்கோர் ஞானாகாரம்
ஓர் ஏக நம்பிக்கை.

3. கிறிஸ்தோரைச் சாத்தான் லோகம்
பயமுறுத்திடும்;
பின் வாங்கினோரின் த்ரோகம்
மனதை வாதிக்கும்.
சபை ஏங்கலின் அர்த்தம்:
"எம்மட்டும்" என்பதாம்
இராவில் கண்ட வர்த்தம்
காலையில் பூரிப்பாம்.

4. போராட்டம் அவமானம்
இன்னா கஷ்டத்திலும்
நீங்காத சமாதானம்
மெய்ச் சபை வாஞ்சிக்கும்
இனி விண் காட்சிகண்டு
அதென்றும் போர் எல்லாம்
தீர்த்தே, வெற்றி சிறந்து
மகிழும் சபையாம்.

Samuel J. Stone 1866.

## 74. பகலோன் கதிர் போலவே. (Jesus shall reign).

1. ப கலோன் க திர் போ ல வே இயே சு வின் ரா ஜ ரீ க மே பூ லோ கத் தில் வி யா பிக் கும், நீ டு ழி கா லம் வர்த் திக் கும்.

2. பற்பல ஜாதி தேசத்தார்,
தெய்வீக அன்பைப் போற்றுவார்;
பாலரும் இன்ப ஓசையாய்
ஆராதிப்பார் சந்தோஷமாய்.

3. நன் மீட்பர் ராஜ்யம் எங்குமே
சிரேஷ்ட பாக்யம் தங்குமே;
துன்புற்றோர் ஆறித்தேறுவார்,
திக்கற்றோர் வாழ்ந்து பூரிப்பார்.

4. பூலோக மாந்தர் யாவரும்
வானோரின் சேனைத்திரளும்
சாஷ்டாங்கம் செய்து போற்றுவார்,
"நீர் வாழ்க, ராயனே!" என்பார்.

Dr. Watts 1719.

## 75. சாந்தமுள்ள இயேசுவே. (Gentle Jesus, meek and mild).

1. சாந் த முள் ள இயேசுவே, பாலன் மு கம் பா ரு மே; என்னில் த யை கூ ருமேன், என் உள் ளத்தில் தங்குமேன்.

2. உம்மை நாடிப் பற்றுவேன்,
என்னை ஏற்றுக்கொள்ளுமேன்;
மோட்ச ராஜ்ஜியத்திலே
எனக்கிடம் தாருமே.

3. இன்ப முகம் காட்டுவீர்,
என்னைக் கையில் ஏந்துவீர்;
உமக் கேற்றோன் ஆகவே
சுத்தம்பண்ணும், இயேசுவே.

4. தீயோர் துஷ்ட செய்கையை,
நான் செய்யாப்படி என்னை
நீர் நடத்தி ஆளுமேன்,
என்னில் வாசம் பண்ணுமேன்.

5. ஆ, அன்புள்ள இயேசுவே,
அடியேனைப் பாருமே,
என்னை அன்பாய் ரட்சியும்,
மோட்சபாக்யம் அருளும்.

C. Wesley, 1742.

## 76. மென்மேலும் உம்மண்டை. (Nearer my God, to Thee).

1. மென்மேலும் உம்மண்டை என்னை இ ழும் சி லு வை வ ழி யாய் சேர்த்துக் கொண் டும், என் தன் அ




2. தாசன் யாக்கோபைப்போல்,
ராக்காலத்தில்
திக்கற்றுக் கல்மேல் நான்
தூங்குகையில்
என்தன் கனவிலே
உம்மண்டை, தேவனே, ::
சேருவேனே.

3. நீரே நடத்திடும்
பாதை எல்லாம்
விண் எட்டும் ஏணிபோல்
விளங்குமாம்;
தூதர் அழைப்பாரே,
உம்மண்டை, தேவனே, ::
சேருவேனே.

4. நான் விழித்தும்மையே
ஸ்தோத்திரிப்பேன்
என் துயர்க்கல்லை உம்
வீடாக்குவேன்:
என் துன்பத்தாலுமே
உம்மண்டை, தேவனே, ::
சேருவேனே.

Sara Adams 1841.

## 77. என்தன் ஜீவன், இயேசுவே. (Take my life and let it be).






2. என்தன் கை பேரன்பினுல்
ஏவப்படவும், என் கால்
வேகமாய் உழைக்கவும்,
அழகாய் விளங்கவும்.

3. என்தன் நாவு இன்பமாய்
உம்மைப் பாடவும், என் வா
மீட்பின் செய்தி கூறவும்
ஏதுவாக்கியருளும்.

4. என்தன் ஆஸ்தி தேவரீர்
முற்றும் ஏற்றுக்கொள்ளுவீர்,
புத்தி கல்வி யாவையும்
சித்தம்போல் ப்ரயோகியும்.

5. என்தன் சித்தம் இயேசுவே
ஒப்புவித்து விட்டேனே;
என்தன் நெஞ்சில் தங்குவீர்,
அதை நித்தம் ஆளுவீர்.

6. திருப் பாதம் பற்றினேன்,
என்தன் நேசம் ஊற்றினேன்;
என்னையே சமூலமாய்
தத்தம் செய்தேன் உமக்காய்.

Frances Havergal 1878.

## 78. யுத்தம் செய்வோம். (Onward, Christian Soldiers).









2. கிறிஸ்து வீரரே, நீர்
வெல்ல முயலும்;
பின்னிடாமல் நின்று
ஆரவாரியும்!
சாத்தான் கூட்டம் அந்த
தொனிக் கதிரும்,
நரகாஸ்திவாரம்
அஞ்சி அசையும்!
யுத்தம், ஸ்ரீ

3. கிறிஸ்து சபை வல்ல
சேனை போன்றதாம்;
சுத்தர் சென்ற பாதை
செல்கிறோமே நாம்
கிறிஸ்து தாசர் யாரும்
ஓர் சரீரமே;
விசுவாசம், அன்பு,
நம்பிக்கை ஒன்றே,
யுத்தம், ஸ்ரீ

4. க்ரீடம், ராஜமேன்மை
யாவும் சிதையும்,
கிறிஸ்து சபை தானே
நிற்கும் நித்யமும்
"நரகத்தின் வாசல்
ஜெயம் கொள்ளாதே,"
என்ற திவ்விய வாக்கு
வீணாய்ப் போகாதே.
யுத்தம், ஸ்ரீ

5. பக்தரே, ஒன்றாக
கூட்டங் கூடுமேன்,
எங்களோடு சேர்ந்து
ஆர்ப்பரியுமேன்,
விண்ணோர் மண்ணோர் கூட்டம்
இயேசு ராயர்க்கே
கீர்த்தி, புகழ், மேன்மை
என்றும் பாடுமே.
யுத்தம், ஸ்ரீ

Baring Gould 1865.

## 79. என்னோடிரும், என் நேச கர்த்தரே. (Abide with me).

1. என் னோ டி ரும், என் நே ச கர்த் த ரே, வெ ளிச் சம் மங் கி இ ருட் டா யிற் றே; மற் றோர் ஒத்
தா சை அற் றுப் போ யி னும் நீர் மெய்ச் ச கா ய ரே, என் னோ டி ரும்.

2. நீர்மேலே குமிழ்போல் என் ஆயுசும்
இம்மையின் இன்ப வாழ்வும் நீங்கிடும்;
கண்கண்டயாவும் மாறிப்போயினும்,
மாறாத கர்த்தரே, என்னோடிரும்.

3. நியாயம் தீர்ப்பாராக என்னண்டை
வராமல், சாந்தம் தயை கிருபை
நிறைந்த மீட்பராகச் சேர்ந்திடும்,
நீர், பாவி நேசரே, என்னோடிரும்.

4. நீர் கூட நின்று தாங்கிவாருமேன்,
அப்போது தீமைக்கு நான் தப்புவேன்;
நீர், என் துணை என் பாதைகாட்டியும்;
என் இன்ப துன்பத்தில் என்னோடிரும்.

5. நான் அஞ்சிடேன் நீர் கூடத் தங்கினால்;
என் க்லேசம் மாறும் உம் ப்ரசன்னத்தால்
சாவே, எங்கே உன் கூறும் ஜெயமும்?
என்றாரவாரிப்பேன்; என்னோடிரும்.

6. நான் சாகும் அந்தகார நேரமே
நீர் ஒளியாய் விண் காட்சி காட்டுமே;
பேரின்ப ஜோதி வீசச் செய்திடும்;
என் ஜீவன் சாவிலும் என்னோடிரும்.

H. F. Lyte, 1850.

## 80. எருசலேம், என் ஆலயம். (Jerusalam my happy home).







2. பொன் தளம் போட்ட வீதியில்
எப்போ துலாவுவேன்?
பளிங்காய்த் தோன்றும் தலத்தில்
என்றைக்குத் தொழுவேன்?

3. என்னாளும் கூட்டம் கூட்டமாய்
நிற்கும் அம் மோட்சத்தார்
ஓய்வின்றி இயேசுவை ஒன்றாய்
துதித்துப் பாடுவார்.

4. நானும் அங்குள்ள கூட்டத்தில்
சேர்ந்தும்மைக் காணவே
வாஞ்சித்து, லோகத் துன்பத்தில்
களிப்பேன், இயேசுவே.

5. எருசலேம் என் ஆலயம்,
நான் உன்னில் வாழுவேன்;
என் ஆவல், என் அடைக்கலம்;
எப்போ கண்டடைவேன்?

Frnnces Baker, 1628.

## 81. பேரின்ப ஊர் உண்டே. (There is a happy land).







2. இவ்வூரின் வாழ்வையே
நாடுங்களேன்!
நாம் அதில் சேரவே
தாமதம் என்?
அங்கென்றும் மகிழ்வோம்
பாவத் துக்கம் நீங்கிப்போம்,
கிறிஸ்தண்டை தங்குவோம்,
வாருங்களேன்.

3. நேச பிதாவது
அன்பை அங்கே
கண்டு ருசிப்பது
ஆனந்தமே.
விண் மாட்சிக் கோடுவோம்,
க்ரீடம் ஆட்சி பற்றுவோம்,
காந்தி சூழ்ந்தாளுவோம்
என்றென்றுமே.

H. Bz.

A. Young, 1843.

## 82. என் பிதா என்னோடு (My-Father).







2. இயேசு மீட்பாலே
பிள்ளையானேனே
ஞானஸ்நானத்தாலே
பாவம் நீங்கினதே. ஷ

3. நேச பிள்ளையாக
என்னைச் சேர்த்தாரே
நற் றகப்பனாக
என்னைக் கைவிடாரே. ஷ

4. என் பிழைகளாலே
தள்ளவே மாட்டார்;
சுதன் ரத்தத்தாலே
குற்றம் மன்னிக்கிறார். ஷ

5. மன நோவுண்டான
போதுங் கலங்கேன்
என் பிதா அன்பான
மார்பில் சார்ந்திருப்பேன். ஷ

6. நான் பிதாவின் சத்தம்
என்றுங் கேட்கவே,
அவருக்குள் நித்தம்
ஊன்றித் தங்குவேனே. ஷ

7. இக்கிருபை தானே
ஒப்பில்லாததே
அவர் வீட்டில் நானே
சேர்ந்து பூரிப்பேனே. ஷ

From the Swedish.

# INDEX:

# அட்டவணை







கர்த்தருக்கு இனிதாய்ப் பாடுங்கள்

கொலோ. ௩, ௰௬.